உ

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாயுடையார்கோயில்

# திருப்பணிமாலை.

[இரண்டாம் பதிப்பு]

இது,

மதுரைத்தலவரலாற்றுடன்

மதுரைத் தமிழ்ச்சங்கத்தக்கிராசனாதிபதியும்,

பாலவனத்தம் ஜமீந்தாருமான

பொ. பாண்டித்துரைத்தேவரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப்பிரசுரம் உஎ.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலை.

[ருதிரோற்காரி-ஹு ஆனிமீ]

விலை அணா 6.

உ

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாயுடையார்கோயில்

# திருப்பணிமாலை.

இது

மதுரைத்தலவரலாற்றுடன்

மதுரைத் தமிழ்ச்சங்கத்தக்கிராசனாதிபதியும்,

பாலவனத்தம் ஜமீந்தாருமான

பொ. பாண்டித்துரைத்தேவரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—உஎ.

இரண்டாம் பதிப்பு.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை.

[ருதிரோற்காரிஸு ஆனிமீ.]

விலை அணா 6.

உ

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

திருவாலவாயுடையார் திருப்பணிமாலை என்பது, துவாதசாந்த க்ஷேத்திரமும், இறைவன் எண்ணெண் திருவிளையாடல்களை இயற்றியருளிய ஸ்தலமுமாகிய திருவாலவாயிலுள்ள திருக்கோயில், திருக்கோபுரம், மண்டபம், பொய்கை, வாகன முதலிய சிவதர்மங்கள் இன்ன இன்ன காலத்து இன்னார் இன்னாரால் இவ்வாறு இயற்றப்பெற்றன என்பதை முறைப்படத் தமிழ்ப்பாவில் அமைத்துப் பாடப்பெற்றதொரு நூலாகும். இத்தகைய திருப்பணிமாலைகள் முக்கியமான சிவாலயங்கட்கெல்லாம் முன்னோரால் அமைக்கப்பட்டுள்ளன என்பர். இம்மதுரைத் திருப்பணிமாலை பெரும்பாலும் கட்டளைக்கலித்துறைகளாலும் சிறுபான்மை ஆசிரியவிருத்தங்களாலும் பாடப்பெற்றது; இம்மாலை இயற்றியவர் இன்னாரென்பது நிச்சயிக்கக்கூடவில்லை. தாண்டவமூர்த்திப் பண்டாரம் இதனையியற்றியவர் என்பர் சிலர். இந்நூற்பாடல்களிற்சில சிறந்தும், சில சிறப்பின்றியும் அமைந்திருத்தலை நோக்கும்போது இந்நூல், பலராற் பாடப்பெற்றதுபோலும் என்று கருதலாம். எங்ஙனமாயினும், மதுரைத்திருக்கோயில்சம்பந்தமான புராதன சரித்திரங்கள் பலவற்றை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இந்நூல் விளக்குவதென்பதிற் சிறிது மையமில்லை.

இந்நூலிற் சிற்சில பாடல்களைச் சிலர் வெளியிட்டிருப்பதன்றி நூன்முழுதும் இதற்கு முன்பு வெளிவந்திலது. இத்தகைய நூல் புராதனத் திருப்பணிகளை மட்டுமேயன்றி, அச்சிவதர்மங்களை நடத்திக் கீர்த்திபெற்ற புண்ணியசீலர் பலர் வைபவங்களையும் நன்குவிளக்குதலால், இந்நூலைப் போற்றிவைத்தல் இன்றியமையாததென்று கருதினேன். ஆனால், நூன்முழுதும் சுத்தமாகவமைந்த பிரதி கிடைத்ததில்லை. மதுரை ஸ்ரீ பரமசிவபட்டாவர்களாலும், மகா-ா-ா-ஸ்ரீ மு. ரா. அருணசலக்கவிராயரவர்களாலும் கிடைத்தனவும், இறுதியிற் சிதைந்தனவுமான இரண்டு பிரதிகளைக்கொண்டு ஆராய்ச்சி செய்து இந்நூல் பதிப்பிக்கலாயிற்று. எழுதியோரால் மிகுதியும் வழுப்பட்டுக்கிடந்த இப்பிரதிகளை வைத்துப் பதிப்பித்த என் முயற்சியிலுள்ள குற்றங்குறைகளை

*

அறிஞர் எனக் கறிவிப்பினும், நல்ல பிரதிகளுடையவர் அவற்றையனுப் பினும் அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுவதோடு, அன்னோர்பால் என்றும் நன்றியறிந்தவனுமாவேன்.

இந்நூலில், திருப்பணிசெய்த முன்னேயோர் வரலாறுகளுள், நெல் ஸன் துரையவர்களது "மதுரை நாடு" (The Madura country) முதலியவற்றாலும் வேறுசில தமிழ்நூல்களாலும் தெரியவந்த விஷயங் களை அவ்வப்பாட்டின் கீழ்க்குறிப்பில் தெளிவுபடுத்தி யிருக்கிறேன். இம்மாலையிற்கண்ட திருப்பணியிடங்கள் சில, இப்போது முற்றும் மாறி விட்டன; இவை விளங்காதுபோயினும், மற்றத் திருப்பணியிடங்கள் பெரும்பாலும் கீழ்க்குறிப்பில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. மதுரை ஸ்ரீ பரமசிவபட்டாரவர்கள் இவைசம்பந்தமாகத் தெரியவேண்டிய விவா ணங்கள் சிலவற்றை விளக்கி உதவிபுரிந்தார்கள்.

"மதுரைத்தலவரலாறு" என்னும் பெயர்கொண்டதும் அவ்வளவு சிறப்பில்லாத தமிழ்நடையில் அமைந்ததுமான சிறுநூலொன்றின் பழம் பிரதியும் இத்திருப்பணிமாலையுடன் கிடைத்தது. இதனுட்கண்ட சரித்திரங்களால் மதுரையைப்பற்றிய பலவிஷயங்களைச் சுருக்கமாக நாம் அறியக்கூடும். பழைய சிலாசாஸனங்கள் பாஷைநயத்தில் தாழ்ந்தனவா யிருப்பினும், அவற்றைத் தமிழபிமானிகள் அறிந்து மகிழ்வதுபோல, இந்நடைநூலையும் விஷயநயம்பற்றிக் கொள்வார்களென்று நம்பி, அதனை இம்மாலையின் முதலிற் பதிப்பித்திருக்கிறேன். இதனுள் திருப்பணி செய்தோர் பெயர் காலம் இடமுதலியவை ஒருகோவைப்பட எழுதியிருப் பது எல்லாருங் கவனித்தற்குரியது. இங்ஙனம் பெருஞ் சிவபுண்ணி யங்களை நடத்திய தர்மவான்களுடைய திருப்பணிவிவரங்களைத் தமிழ கத்துக்கு அறிவித்து வெளியிடுந் திருப்பணியை எனக்களித்த ஆலவா யடிகளின் திருவருளைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

இங்ஙனம்,

பொ. பாண்டித்துரை.

உ

திருச்சிற்றம்பலம்.

# மதுரைத்தல வரலாறு.

———:(o):———

"சுவாமி உடையார் திருவாலவாயுடைய தம்பிரானர் கோயில், கபாலியுடைய நயினர் மதுரைக்கு வாய்த்த பெருமாள் கோயில் (ஞாபகம்) "உடைய சிவன்புதல்வ னுக்கிரனுக் கப்பால், அடையு முடி யையெட்டு லக்கத்—துடையறுபத், தையா யிரத்தறுநூற் றைம்பதின் மேலழகன், கைவேற் குலசேகரன்." இப்படி, குலசேகர பாண்டியன்முதல் வாளால் விழித்துறங்கும் பெருமாள் பராக்கிரம பாண்டியதேவர் வரைக்கும் வெகு பாண்டியாதிக்கம் அனுபவித்து, வாளால் விழித்துறங்கும் பராக்கிரம பாண்டியதேவரை, கலியுகத்தில் சாலிவாகன சகாப்தம் ௬௨௪௬-க்குக் கொல்லமழிந்து ஆண்டு [1] ௫0௪-க்கு மேல்—ருத்ரோத்காரி-௵ ஆனி௴ வடக்கே டில்லியிலிருந்து ஆதிசுலுத்தானும், மலுக்கு நேமியான்[2] என்பானும் வந்து, பராக்கிரமபாண்டியதேவரைப்பிடித்துக் கட்டிக் கொண்டு டில்லிக்கு அனுப்புவித்துப்போட்டு, ராச்சியத்தைக் கட்டிக் கொண்டார்கள். ருத்ரோத்காரி-௵ ஆவணி௴ முதல் குரோதன-௵ வரைக்கும் வருஷம் மூன்றுக்கு ஹிமஸ்ஸேது பர்யந்தம் துலுக்காணிய மாய் மன்வந்தரமாய் ஒருவருக்கொருவர் தோற்காமல் கலாபமாயிருந்து, பின்பு, உலாபதிகான் (அல்லா உட்டீன்கான்?) என்கிற துலுக்கன்வந்து அட்சய௵ முதல் ப்ரஜோத்பத்தி௵ வரைக்கும் வருஷம் ஆறுக்கு ராச்சியம் ஆண்டான். பின்பு உலாபதிகான் உதசிக்கு ஆய்ங்குறுலன்[3] ஆங்கீரஸ-௵ முதல் பவ-௵ வரைக்கும் வருஷம் மூன்றுக்கு ராச்சியம் ஆண்டான். பின்பு மேற்படி மருமகன் குதிபதிக்கு[4] என்கிறவன் யுவ-௵ முதல் பிரமாதீச-௵ வரைக்கும் ராஜ்யம் ஆண்டான். பின்பு விக்கிரம-௵ ஆடி௴ முதல் விஜய-௵ வரைக்கும் நகலதிக்கி[5] என்றவன் ராஜ்யம் ஆண்டான். பின்பு சாவதுமலுக்கன்[6] ஆட்டுமாருகன்[7] என்கிறவர், சர்வஜித்-௵ முதல் விளம்பி-௵ வரைக்கும் ராஜ்யம்

(1) கி. பி. 1323.

(2) இவன், அபஸீர்த்திவாய்ந்த அல்லா I என்பவனது சந்ததியானுகிய, பிரிவ்ஷடாவைச்சார்ந்த மாலிக்நேபிகாபாராக இருக்கவேண்டுமெனபர்.

(3) Uttam-ud-dhin (?) (4) Kutub-up-dhin (?) (5) Na-Kal-ud-dhin (?) (6) Savada Malik (?) (7) Ahad-Malik (?).

ஆண்டார்கள். பின்பு விகாரி-ஷ முதல் சாதாரண-ஷ வரைக்கும் புங்கதிக்கு மலுக்கன் என்கிறவன் ராஜ்யம் ஆண்டான். சகாப்தம் கஉசகூ-முதல் சகாப்தம் கஉகூரு-வரைக்கும் ஷ சஅ, துலுக்காணியமாய் நாயனார் மதுரைக்கு வாய்த்த பெருமாளும் நாஞ்சில்நாடு (தேசத்துப்) போய், பஞ்சாக்ஷரத்திருமதிளும் பதினாலு கோபுரமும் தெருவீதிகளும் இடிபட்டன. நாயகர்கோவில் கர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபம் மகாமண்டபம் வரைக்கும் தப்பியிருந்தது."

"இப்படித் துலுக்காணியமாக இருக்கும் நாளையில் கஉகூரு-க்கு மேற் செல்லாநின்ற விரோதிகிருது-ஷ மைசூரான்வாசல் தளகர்த்தம் கம்பண உடையார் * (கன்னடியர்) துலுக்கரை வெட்டித் துரத்தி ராச்சியம் கைக்கொண்டு சிவஸ்தல விஷ்ணுஸ்தலமெல்லாம் திருக்காப்புநீக்கி, திருவாலவாயுடைய நயினார் கோயில் சந்நிதியில் திருக்காப்பும் நீக்கி, சுவாமிதரிசனம் பண்ணப்போகையில், சுவாமிக்கு அன்றைக்கு வைத்த விளக்கும் அன்றைக்குச்சாத்தின புஷ்பமாலையும், இராவில் பூசையிற் சாத்திக் காலசந்தியிற் கழிக்கும்போது எப்படியிருக்குமோ அப்படி இருந்தது. இந்த அதிசயத்தைக் கம்பணவுடையார் கண்டு வெகு சந்தோஷப்பட்டுக் கன்னங்களிலே அறைந்துகொண்டு வெகுபக்தியுடனே உபசாரங்கள்செய்து அநேக திருவிளையாடற் கிராமமும் விட்டுக்கொடுத்து அநேக திருவாபரணமுங் கொடுத்துத் திருவாராதனைக்கட்டளையும் நடப்பித்துக்கொண்டு கம்பணவுடையார், அவர் மகன் எம்பணவுடையார், அவர் மருமகன் பொற்காசுடையார்—இவர்கள் மூன்றுபேரும் விரோதிகிருது-ஷ முதல் சித்திரபாநுஷ வரைக்கும் ஷ ருரு-க்கு ராஜ்யம் ஆண்டார்கள். அவர் நாளையில் சிவஸ்தலம் விஷ்ணுஸ்தலமெல்லாம், அநேகந் திருவாபரணமும் திருவாராதனையும் பண்ணுவித்து நடப்பித்தார்கள்."

"பின்பு, சகாப்தம் கருஉஎ-க்குமேற் செல்லாநின்ற சுபானு ஷ முதல் விபவஷ வரைக்கும் ஷ சஎ-க்கு லக்கணநாயக்கர், மதனநாயக்கர் ராஜ்யம் ஆண்டார்கள்."

---

* இவர் விஜயநகர அரசரால் அனுப்பப்பட்டு, தென்னாட்டை ஜெயித்து, அவர் பிரதிநிதியாய் ஆண்டவரென்று தெரிகிறது. (Nelson's Madura country, Part III, Page 82.)

"அப்பால் சகாப்தம் ௧௩௭௪-க்கு மேற் செல்லாநின்ற சுக்கில ௵ முதல் நள ௵ வரைக்கும் ௵ ௪௮-பாண்டியராஜாவினுடைய வைப்பாட்டி காளையார்கோவில் தாசி அபிராமிவயிற்றுப்பிள்ளை சுந்தரத்தோள் மாவலிவாணாதிராயர், காளையார் சோமனார், அஞ்சாதபெருமாள், முத்தரசர், திருமலைமாவலிவாணாதிராயர் நாளையில், (இவர்களை) லக்கணநாயக்கர் கொண்டுவந்து பாண்டியனுக்குப் பிறந்த பிள்ளையென்று பட்டங்கட்டி வைத்துக் கையெடுத்துக் கும்பிட்டு ராஜ்யத்தையும் அவர்கள் கைவசப் படுத்திக்கொடுத்து ராஜ்யம் ஆண்டார்கள்."

"அப்பால் சகாப்தம் ௧௪௨௨-க்கு மேற் செல்லாநின்ற பிங்கள ௵ வைகாசி௴ நரசய்யநாயக்கர்* வந்து ராமேசுவரம் சேவித்துக் (கோட்டையையும் கைவசப்படுத்தினார்) ஆவணி௴ முதல் ஆங்கிரஸ௵ வரைக்கும் ௵ ௧௫-க்கு தென்னநாயக்கர் ஆண்டார். அப்பால் சகாப்தம் ௧௪௩௭-க்கு மேற் செல்லாநின்ற ஸ்ரீமுக ௵ முதல் தாது ௵ வரைக்கும் ௵ ௪-க்கு நாச்சியப்பபிள்ளை† என்கிறவர் ராச்சியம் ஆண்டார். அப்பால் ஈசுவர௵ முதல் விஷு௵ வரைக்கும் ௵ ௫-க்கு குருகுரு திம்மப்பநாயக்கர் ராஜ்யம் ஆண்டார். அப்பால் சகாப்தம் ௧௪௪௯-க்கு மேற் செல்லாநின்ற சித்திரபானு ௵ முதல் சுபானு ௵ வரைக்கும் ௵ ௨-க்கு கட்டியங்காமயநாயக்கர் ராஜ்யம் ஆண்டார். தாருண௵ முதல் சர்வஜித்௵ வரைக்கும் ௵ ௪-க்கு சின்னப்ப நாயக்கர் ராஜ்யம் ஆண்டார். சர்வதாரி ௵ முதல் நந்தன௵ வரைக்கும் ௵ ௫-க்கு ஈயக்கரை வெய்யப்ப நாயக்கர் ராஜ்யம் ஆண்டார். விஜய ௵ முதல் விபவ ௵ வரைக்கும் ௵ ௯-க்கு விசுவ நாயக்கரையன் ராஜ்யம் ஆண்டார். சுபகிருது ௵ வாத மன்னர்கள் ‡ பட்டம். சோபகிருது௵ முதல் குரோதி௵ கார்த்திகை௴ வரைக்கும் ௵ ௧-க்கு தும்பிச்சி நாயக்கர் ராஜ்யம் ஆண்டார். குரோதி ௵ மார்கழி௴ முதல் விசுவாவசு ௵ வரைக்கும் வருஷம் ௧, மாசம் ௭-க்கு விசுவநாத நாயக்கரையன் ராஜ்யம் ஆண்டார். பராபவ ௵ முதல் பிங்கள ௵ வரைக்கும்

---

* இந்த நரசய்யநாயக்கரும் இவர்க்குப் பின்னர்ச் சொல்லப்படுவோரும் விஜயநகர அரசரின் பிரதிநிதிகளாக அனுப்பப்பட்டு ஆண்டவர்கள்.

† நரசபிள்ளை என்று நெல்ஸன் துரையவர்களது "மதுரை நாட்டிற்" காணப்படுகிறது.

‡ வாதப்பநாயக்கர் என்று காரணங்காட்டுவர், நெல்ஸன் துரையவர்கள்,

விட்டிலூர் ராஜா என்கிறவர் ராஜ்யம் ஆண்டார். காலயுக்திஸு முதல் ரௌத்திரிஸு கார்த்திகைமீ வரைக்கும் ஸுகஙு-க்கு திம்மப்ப நாயக்கர், செல்லப்ப நாயக்கர் பட்டுக்கோட்டை ஏரப்ப நாயக்கர்,—இவர்கள் மூன்று பேரும் ராஜ்யம் ஆண்டார்கள். சகாப்தம்-கஉசசு-க்குமேல் நாளது சகாப்தம் கசஅக-க்கு சகாப்தம் வருஷம் உஙுறு-க்கு ராஜ்யமதுரையாண்டதுரைகள் உஎ-பேர்கள்."

"சகாப்தம்—கசஅக-க்கு மேற்செல்லாநின்ற ரௌத்திரி-ஸு மார்கழிமீ ராயர் உத்தரவுப்படிக்குக் கோடியம் நாகமநாயக்கர்மகன் விசுவநாதநாயக்கர் மதுரைக்குவந்து ரௌத்திரி-ஸு-மார்கழி-மீ முதல் ஆங்கிரச-ஸு வைகாசி-மீ வரைக்கும் ஸு கஉஇ-க்கு ராஜ்யம் ஆண்டு அஸ்தமனமானார். ஷை ஸு ஆனி-மீ முதல் விஷு ஸு வைகாசிமீ வரைக்கும் ஸு கூ-க்கு, விசுவநாத நாயக்கர் குமாரர், கிருஷ்ணப்பநாயக்கர் ராஜ்யம் ஆண்டு அஸ்தமனமானார். ஷை ஸு ஆனி-மீ முதல் மன்மத ஸு வைகாசிமீ வரைக்கும் ஸு கச-க்குக் கிருஷ்ணப்பநாயக்கர் குமாரர் வீரப்பநாயக்கர் ராஜ்யம் ஆண்டு அஸ்தமனமானார். ஷை ஸு முதல் சுபகிருது ஸு ஆனிமீ வரைக்கும் ஸு எ-க்கு வீரப்பநாயக்கர் குமாரர் குமாரகிருஷ்ணப்பநாயக்கர் ராஜ்யம் ஆண்டு அஸ்தமனமானார். ஷை ஸு புரட்டாசிமீ முதல் பிலவங்கஸு மாசிமீ வரைக்கும் ஸு ௵இ-க்குக் குமாரகிருஷ்ணப்ப நாயக்கர் தம்பி விசுவப்பநாயக்கர் ராஜ்யம் ஆண்டு அஸ்தமனமானார். ஷை தம்பி கஸ்தூரி ரெங்கப்ப நாயக்கர் பட்டத்துக்குவந்து ஆற்றுக்கு அக்கரையில் சந்தியாமண்டபத்தில் எட்டாம் நாளையில் அஸ்தமனமானார். ஷை விசுவப்பநாயக்கர் மகன் முத்து கிருஷ்ணப்பநாயக்கரும், ஷையார் குமாரர் முத்துவீரப்பநாயக்கர் அவர்களும் ஷை ஸு பங்குனிமீ முதல் துந்துபி ஸு கார்த்திகைமீ வரைக்கும் ஸு கஙுஞ-க்குப் பட்டங்கட்டிக்கொண்டு ராஜ்யம் ஆண்டு அஸ்தமனமானார்கள். துந்துபி ஸு மார்கழிமீ எ-ஆந்தேதி முத்துவீரப்பநாயக்கனய்யரவர்கள் தம்பி முத்துத்திருமலைநாயக்கனய்யரவர்கள், சந்நிதியிலே ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் கடாக்ஷத்துக்கு மிகவும் பாத்திரராகி, சுவாமிக்கு அநேக திருவாபரணமுங்கொடுத்து, புதுமண்டபமுந் தெப்பக்குளமுங்கட்டி வைத்து, நாயகர் சந்நிதியில் தங்கமிலாம்போட்ட சிம்மாசனமும், தந்தச்சப்ரமும், கருங்கற்சவுக்கையும், "இரத்தினசிம்மாசநமும் பண்ணுவித்துக்கொடுத்து, ஏழுகோவிலுக்கும் அநேகந் திருப்

பணிகளும் கட்டுவித்து, நித்திய பூஜைக்கு நாற்பத்துநான்காயிரம் பொன் (வருவாயுள்ள) சீமையும் விட்டுக்கொடுத்து, ஸ்தானீகர் பரிஜனங்களுக்கு அன்னபானாதிகளுக்காக சர்வமானியக் கிராமங்களும் விட்டுக்கொடுத்துத் தம்முடைய சொந்தத்தில் அறைக்கட்டளையு முண்டு பண்ணிவித்துக் கட்டளைக்கிராமங்களும் விட்டுக்கொடுத்து, திருவிழா உற்சவாதிகளுஞ் சிறப்பாகநடப்பித்து, சுவாமி ஆண்டவன் அழகருக்குச் சித்திரைத் திருநாளைக்குச் சப்பரமு முண்டுபண்ணிவைத்து, ஸ்தலங்களையெல்லா மிகுந்த பிரபலமாகப் பண்ணிவைத்து, சுவாமி தரிசனத்துக்கு வந்தால் சுவாமிக்கு பாதகாணிக்கை அபிஷேக நைவேத்தியங்களுக்கு ஆயிரம் பொன்கொடுக்கிறது; சுவாமி மாசிவீதியிலெழுந்தருளினால் சுவாமிக்குப் பாதகாணிக்கையில் ஆயிரம்பொன் கொடுக்கிறது. இந்தப்படிக்குத் துந்துபிஞு-மாசிமீ எ-ஆந்தேதிமுதல் விளம்பி ஞு மாசிமீ ச-ஆந்தேதிவரைக்கும் ஞு நசு-க்கு ராஜ்யம் ஆண்டு, விளம்பி ஞு மாசிமீ ச-ஆந்தேதி செவ்வாய்க்கிழமை இராத்திரி தெய்வீகமானார். விளம்பிஞு பங்குனிமீ முதல், விகாரிஞு வைகாசிமீ வரைக்கும், மீ ந-க்கு ஷெயார் குமாரர் முத்துவீரப்பநாயக்கரய்யனவர்கள் ராஜ்யம் ஆண்டார். விகாரிஞு ஆனிமீ முதல், துந்துபிஞு ஆனிமீ வரைக்கும் ஞு உச-க்கு, முத்துவீரப்பநாயக்கனய்யாவர்கள் குமாரர் சொக்கநாத நாயக்கரய்யனவர்கள் ராஜ்யம் ஆண்டார். ஆனிமீ ச-ஆந்தேதி, தெய்வீகமானார்."

"அவருடைய குமாரர் ரெங்ககிருஷ்ண முத்துவீரப்பநாயக்கரய்யனவர்கள் உருத்திரோத்காரிஞு ஐப்பசிமீ கஎ-உ முதல் பிரமோதூத வரை ஞு எ-க்கு ராஜ்யம் ஆண்டு தெய்வீகமானார். அதினபிறகு அவர்குமாரர் விசயரெங்க முத்துச் சொக்கநாத நாயக்கரய்யனவர்கள் குழந்தையாகையினாலே அவருடைய பாட்டி மங்கம்மாள் குழந்தையை மடியிலே வைத்துக்கொண்டு சிறிதுநாள் ராஜ்யம் ஆண்டாள். அப்போது அநேகம் அக்கிரகாரப் பிரதிஷ்டைகளும் சத்திரம் சாலை தேவதாயம் பிரம்மதாயமும் மாமூல்படிக்குத் திருமலைநாயக்கர் நாளை ஒப்பந்தம் நடப்பிவித்து வந்தாள். மங்கம்மாள் தெய்வீகமானதின் பிறகு, விசயரெங்க முத்துச் சொக்கநாத நாயக்கரய்யனவர்கள் ராஜ்யம் ஆளுகிற முன்னுக்கு, முன் திருமலை நாயக்கர் நாளையில் நடப்பிவிந்தபடிக்கு நடத்திவைத்து வந்தார்கள். அப்படி நடக்கிற நாளையில் ஒருநாள் நகரசோதனைக்குத்

தனியே கோவிலுக்கு வந்து பார்க்கு மிடத்தில் கோவிற்பூஜை நைவேத்தியம் திருவிளக்கு இவைகள் பூச்சியமாய் நடந்தவயணமெல்லாம் பார்த்துக்கொண்டு, அவர்கள் அரமனைபோய்ச் சேர்ந்தார்கள். மறுநாள் உதயத்தில் ஸ்தலத்தார் பரிஜனங்கள் சகலத்திராளையும் வரவழைத்து, நாம், கோவிலுக்குச் சர்வமானியமாக நாற்பத்துநாலாயிரம்பொன் சீமையும் விட்டிருக்க, இப்படிக் கோவிற்காரியம் தாழ்ச்சிவரவேண்டிய தென்? என்பதாய் நிரம்பவும் கோபம் பண்ணி ஸ்தலத்தார் மாரிபத்திலிருந்த கிராமங்களைச் சர்க்காரிலே கட்டிக்கொண்டு ஸ்தலத்தார் கிராமாந்தரங்களிலே யொத்திவைத்திருந்த ஒத்திப்பட்டயங்கள் எல்லாம்வாங்கிப் பரிகரித்துப் போட்டு, ஏழுகோவில் பூஜைக்கும் நாற்பத்துநாலாயிரம் பொன்னும் அரமனைப்பொக்கிஷத்திலே இருந்து கொடுத்துக் கோவில் நித்தியப்படி, பூஜை, ஆட்டைவிசேஷம், மாதவிசேஷம் திருவிழா உற்சவாதிகளும், சுவாமி ஆண்டவன் அழகர் சித்திரைத் திருவிழாச் சப்பரமும் நடப்பிவித்துக்கொடுத்து, ஸ்தலத்தார் கோவிலுக்கும், முன் திருமலைநாயக்கர் நாளையில் விட்டுக்கொடுத்தபடிக்கு நிர்வாகக்கிராமம், அர்ச்சனுபாகக் கிராமம், அறைக்கட்டளைக் கிராமம் (இவைகளைச்) சாவமானியமாக விட்டுக் கொடுத்து விமரிசையாக நடப்பிவித்து வந்தார்கள்."

"அவர்களும் ௪௦-ஷூ ராஜ்யம் ஆண்டு, விரோதிகிருது-ஷூ மாசி-மீ சிவராத்திரிதினத்தில் தெய்வீகமானூர். விரோதிகிருது-ஷூ மாசிமீ முதல் சித்தார்த்திஷூ வைகாசிமீ வரைக்கும் ஷூ க-க்கு விசயரெங்க சொக்கநாத நாயக்கர் பெண்சாதி மீனாக்ஷியம்மாள் பட்டங்கட்டிக்கொண்டு அவளுடனே கூடப்பிறந்த வெங்கிட்ட பெருமாள் நாயக்கர் ராஜ்யம் ஆண்டார்கள்."

"சகாப்தம்-௧௬௬௮-க்கு மேற்செல்லாநின்ற சித்தார்த்தி ஷூ வைகாசி மீ ௩௦-ஆந்தேதி செவ்வாய்க்கிழமை இராத்திரி, பங்காரு திருமலை நாயக்கரவர்கள் குமாரர் விசயகுமாரமுத்துத்திருமலைநாயக்கரவர்களும், சேதுபதி வாசல் தளவாய் வெள்ளையன்சேர்வைகாரனும் சந்தேகான் படேகான் வந்து திண்டுக்கல்லைக்கட்டிக்கொண்டான் என்ற செய்திகேட்டு எடுபட்டார்கள். அந்தமுன்னுக்கு மீனாக்ஷிசுந்தரேசுவரர்களையும், கூடலழகரையும், வானரவீரர் மதுரைக்கு எழுந்தருளப்பண்ணுவித்துக் கொண்டு ஸ்தலத்தார் அனந்த கொத்துப் பரிசனங்களுங் கூடப்போ

யிருந்த விடத்தில், சேதுபதியவர்கள் சுவாமிக்குப் பூஜை நைவேத்தியத்திற்குங்கொடுத்துப் பரிஜனங்களுக்கு அன்னபானுதிகளுங்கொடுத்துச் சித்தார்த்திஹு ஆனிமீ முதல் துன்முகிஹு ஆனிமீ வரைக்கும் ஹு உ-க்கு ஆதரித்துவந்தார். இப்படியிருக்கிறவிடத்தில், தேசிங்குராஜாவும் அறுபதினுயிரம் குதிரையுடனே வந்து திரிசிரபுரம் கோட்டையை வளைத்துக்கொண்டு படைகளையும் வெட்டித் துலுக்கரையெல்லாம் எடுத்துவிட்டுத் திரிசிரபுரங்கோட்டைக்கு, முராரிராயரை நியமித்துச் சிவஸ்தலம் விஷ்ணுஸ்தலமெல்லாம் முன்பின் அத்துப்படிக்குச் சர்வமானியமாக விட்டுப் பூஜை நைவேத்தியங்களெல்லாங் குறைவாராமல் நடப்பிக்கச்சொல்லி வடக்கே போய்விட்டார்கள். அதின் பிறகு முராரிராயரவர்கள் தர்மிஷ்டரானபடியினுலே அப்பாச்சிநாயக்கரவர்களைப் பயணப்படுத்தி இரண்டாயிரம் குதிரையும் பயணப்படுத்தி, மதுரைக்கோட்டைக்கு வந்து சுவாமியில்லாத பட்டணத்திலே நாமிருக்கிறது என்னவென் றுடனே பயணம் புறப்பட்டு, வானரவீரமதுரைக்கு ஸ்தானிகர் முதல், அநந்தகொத்துப் பரிஜனங்களும் சென்று சுவாமி தெர்சனம் பண்ணிக்கொண்டு, சேதுபதி மத்தியஸ்தமுங்கொடுத்து, துன்முகிஹு ஆனிமீ கஎ-ஆந்தேதி சனிக்கிழமை போது போந்து இரண்டுநாழிகையளவில் மதுரைக்கு வந்துசேர்ந்து கோவிலிலே யெழுந்தருளினுர்."

"முன் கர்நாடகத்தில் அத்துப்படிக்குக் கோவில்களும் பூமியும் விட்டுக்கொடுத்துச் சாந்தி, சம்புரோக்ஷணையும் பண்ணிப் பூஜை நைவேத்திய முற்சவாதிகளும் விமரிசையாக நடப்பித்தார்கள்."

'சகாப்தம் கசுசுச-க்கு மேற் செல்லாநின்ற உருத்திரோத்காரிஹு வடக்கே இருந்து நிசாம் என்கிற துலுக்கன் திரிசிரபுரங் கோட்டையும் மதுரைக்கோட்டையும் கைக்கொண்டு மாபோசிகான்சாயபு அவர்கள், மம்முதல்லிகான் நவாப்சாயபுஅவர்க ளிரண்டுபேரையும் வைத்துப் போட்டு வடக்கே போய்விட்டான். உருத்திரோத்காரிஹு முதல் ஆங்கிரச ஹு கார்த்திகை மீ உசு-ஆந்தேதி வரைக்கும் ஹு கo மீ சு-வரை துலுக்காணியமாய்ச் சிலநாள் ராஜ்யம் ஆண்டார்கள். இப்படியாளுமிடத்தில் மதுரைக்கோட்டை அப்துலாகுமுகான் நாளையில், மயானுமைத்துஎன் ஆல்முகான் தொண்டைமான் சீமைவழியே இரண்டாயிரம் குதிரையுடனே வந்து, மதுரைக்கோட்டையைக் கட்டிகொண்டு

ஒருவருஷம், திருவடிராஜ்யம் முதல்கொண்டு மருட்டி திரிசிரபுரம் கோட்டைக்குப் பயணம் போகிறபோது மதுரைக்கோட்டைக்கு மயாணுவை வைத்துப்போட்டுத் திரிசிரபுரத்தில் சந்தேகான் பாளையத்திற்போய்ச் சேர்ந்து தர்க்கம்பண்ணினவிடத்தில் ஆல்முகானும் பட்டுப்போனான். மருட்டி மம்முதுல்லீன் நவாப் சாயபு அவர்கள் சந்தேகான் பாளையத்தை யெடுபடச்செய்வித்துச் சந்தேகானையும்பிடித்து வெட்டிப்போட்டார்கள்.'

"அப்படியிருக்குமிடத்தில் மதுரைக்கோட்டையிலிருந்து மயாணு மைசூர் ராஜவட்டம்பண்ணி மதுரைக்கோட்டையை மைசூராருக்கு விற்றுப்போட்டுத் திருமோகூரிற் போய்விட்டார். அதின் பிறகு மைசூர் வகை கூகுசாயபு ஆங்கிரச-௵ புரட்டாசிமீ ௩௦-ஆந்தேதி கோட்டையிற் பிரவேசமானான். இப்படி மைசூரார் மதுரைக் கோட்டையைக் கட்டிக்கொண்ட செய்திகேட்டுச் சேதுபதிவாசல் தளகர்த்தம் வெள்ளையன்சேர்வைகாரரும், உடையாத்தேவர் வாசல் பிரதானி தாண்டவராய பிள்ளையும் இருவரும் வெகுதளத்துடனேவந்து மதுரைக்கோட்டையை வளைத்துக்கொண்டார்கள். கூகுசாயபு கோட்டைக்குள்ளே நாளது புரட்டாசிமீ ௩௦-ஆந்தேதி முதல் கார்த்திகைமீ உ௬-ஆந்தேதி வரைக்கும் கோட்டை முத்திரையாக்கி மத்தியஸ்தத்தின்பேரிற் கோட்டையைச் சேதுபதிவசம் விட்டுப்போட்டுத் திண்டுக்கல் முகமாய்ப் போய்விட்டான். இந்தப்படி உருத்திரோத்காரி ௵ முதல், ஆங்கிரச ௵ கார்த்திகைமீ க௬-ஆந்தேதி வரைக்கும் இந்தப்படியாகி நாநாவித சல்யங்களாக இருந்தமையினாலே, கலியுகம்-௪அ௫௩. சாலிவாகன-சகாப்தம்-க௬எ௩-க்கு மேற் செல்லா நின்ற ஆங்கிரச௵ கார்த்திகைமீ க௬-ஆந்தேதி சேதுபதி வாசல் தளகர்த்தம் வெள்ளையன்சேர்வைகாரரும் உடையாத்தேவர் வாசல் தளகர்த்தம் தாண்டவராயபிள்ளையும், மதுரைக்கோட்டையிற் பிரவேசமாகிக் கோவிலுந் திறந்து, பூஜை நைவேத்தியமும் நடப்பிக்க, கூகுசாயபு அடைகோட்டையிலே அனேகம் பசுக்களை வதைபண்ணித் தென்னை மரங்களையும் வெட்டித் தின்று பட்டணமெல்லாம் அவந்தரை பண்ணினபடியினாலே, ஏழுகோவிலுக்குஞ் சாந்தி சம்புரோக்ஷணையும் பண்ணி வைத்து ராஜ்யத்துக்கு ராஜாவில்லாமலிருக்கலாகாதென்று, பங்காரு திருமலைநாயக்கரய்யனவர்கள்குமாரர், விசயகுமாரு முத்துத்திருமலை நாயக்கரவர்களை, வெள்ளிக்குறிச்சியிலிருந்து அழைப்பித்து, ஆங்கிரச-௵ மார்கழிமீ க௪-ஆந்தேதி சோமவாரம் நாச்சியார் சன்னிதியில் பட்டாபிஷேகம் பண்ணுவித்துச் செங்கோலும் வாங்கிக்கொண்டு அரமனை சேர்ந்தார்கள்."

"அதன் பிறகு ஆங்கிரச௵ மாசிᏢ ௧௪-ஆந்தேதி முதல் ஸ்ரீமுக ௵ வைகாசிᏢ ௩௦-ஆந்தேதிவரைக்கும் Ꮲ ௧௫-க்கு ராஜ்யம் ஆண்டு வருகையில், மயாணாவும், மகதிமீயாவும், நபீகானும் இந்தமூன்றுபேரும் கோட்டையிலிருந்த கர்த்தாக்களைக் கோட்டையை விட்டு வெளியே துரத்தி வெள்ளிக்குறிச்சிக்கு அனுப்புவித்துப்போட்டு மதுரைக்கோட்டையுஞ் சீமையும் கட்டிக்கொண்டு பழையபடிக்கு ஆண்டுவருகையில், கோவில் சீமை பூமியெல்லாம் அவாந்தரமாய்க் கட்டிக்கொண்டு பட்டணத்தில் செட்டிவர்த்தகர்களையுங் கெடுத்து, தோப்புத் துரவுகளையுமழித்து, இப்படிக்கெல்லாம் அவலம்பண்ணிக்கொண்டு இருக்கிற வேளையில், மைசூரார்வகை கூகுசாயபு வெள்ளையன் சேர்வைகாரரோடு வந்து கோட்டையைச் சுற்றிக்கொண்டு பனையூர் அனுப்பாலடியில் ஆறுமாதமாய்ப் பாளையமிறங்கிக்கொண்டு இருந்து சாதிததவிடத்திலே, வெள்ளையன்சேர்வைகாரரையும், கூகுசாயபுவையும், மயாணா கூட்டம் வெட்டித் துரத்திப்போட்டு, ஸ்ரீமுக௵ ஆனிᏢ முதல் பவ௵ மாசிᏢ ௨௧-௨ வரைக்கும் மதுரைச் சீமையும் கோட்டையுங் கட்டிக்கொண்டு இருக்குமிடத்தில் கலியுகம் ௪௮௫௫-சாலிவாகனசகாப்தம் ௧௬௭௫-க்கு மேற் செல்லாநின்ற பவ௵ மாசிᏢ ௨௨-௨ வடக்கே தேவனும் பட்டணத்திலிருந்து பரங்கிகளாயிரம்பேரும் இருபது பீரங்கியும், மாபோசுகான் நவாபுசாயபு அவர்களும் புறப்பட்டு நத்தத்துக் கணவாய் வழியாகவந்து மதுரைக்கோட்டையைக் கட்டிக்கொண்டு, மயாணா இருந்த திருமோகூர்க் கோவிலையுங் கோட்டையாகச் செய்துகொண்டு சண்டைபண்ணினபடியினாலே, அந்தக் கோவிலையெல்லாம் பரங்கிகள்போய்க் கொள்ளையிடத் திருவாபரணங்களையு மெடுத்துக்கொண்டு விக்கிரகங்களையு மெடுத்துக்கொண்டு மதுரைக் கோட்டை வந்துசேர்ந்தார்."

"அதன்பிறகு திருநெல்வேலிவரைக்கும் போய் மதுரைக்கு வந்து வடக்கே திரிசிரபுரத்துக்குப் பயணம்போகிறபோது திருமோகூர் விக்கிரகங்களை ஒட்டகையின்பேரில் போட்டுக்கொண்டு போகிறபோது, அழகர் கோவிற் பாதையில் நாட்டுக்கள்ளர்கள் வந்து விழுந்து விக்கிரகங்களைக் கைவசப்படுத்திக்கொண்டு கோயிலிலே கொண்டுவந்து சேர்த்தார்கள். அதன்பிறகு மதுரைக்கோட்டையிலே மாபோசுகான் நவாபு சாயபு அவர்கள்மனுஷன் பருக்குதில்லாவிருந்து அதிகாரம்பண்ணுகையில், ஒரு

தானுக்கப்பக்கிரி வந்து சுவாமி சன்னிதியிலே திருமலைநாயக்கர் கட்டு வித்த புதுமண்டபத்துக்கு முன்பாக ராயர்கோபுரத்துந் திருநிலைக்காலி லே நிசான் கட்டுவித்துக்கொண்டு கோபுரத்தின் மேடையிலே கொடிகட்டு கிறதற்கு இரண்டுபடைச் செங்கல் சுவரும் போட்டுவித்துக்கொண்டு இருக்கிறவேளையில் ஸ்தலத்தார் அனந்தகொத்தும் பட்டணத்திலிருக் கிற செட்டிவர்த்தகர்கள் சகல ஜனங்களும் சங்கேதமாகக் கூட்டங்கூடி ஆனமட்டும் பிரயத்தினம்பண்ணின விடத்தில் காலம் திவாணமானதி னாலே கோபுரத்தைவிட்டு இறங்கமாட்டோமென்று கோபுரத்திலேதானே யிருந்தான். ஸ்தலத்தார் நான்கு கோபுரவாசலையும் அடைத்துக்கொண்டு சன்னிதிவாசல் திட்டி திறந்துகொண்டு கோவிலுக்குள்ளே இருந்தார் கள். இப்படியிருக்குமிடத்தில் யுவஹூ தைமீ ௩-உ சுவாமிகோவில் ஆஸ்தானமண்டபம் பொற்கம்பத்தடிக்குத் தென்கீழ்மூலையில் இருக்கிற வாதாடும் பத்திரகாளியம்மனிடதுகண் தைமீ ௩-உ விடிந்து இரண்டு நாழிகையளவில் விழித்தகண் ௫-உ உதயகாலத்தில் மறைந்தது. இந்த அதிசயம் நான்குமுகத்திலேயும் அறியப்பட்டு வெகு ஜனங்களெல்லாம் திருநாள்போலே வந்து பார்த்து அதிசயப்பட்டார்கள். அப்பால் ஈசுவர ஹூ சித்திரைமீ முதல் வடக்கே தேவனும்பட்டணத்திலிருக்கிற பரங்கி களைவகைக்கு முந்தன் கானுசாயபு அவர்கள் தெற்கே திருநெல்வேலி யில் போயிருந்தவர் மதுரைககோட்டையைச் சுற்றி வளைந்துகொண்டு சித்திரைமீ முதல் ஆவணிமீ வரைக்கும் கோட்டையடைபட்டு ஜனங் கள் எல்லாம் வெகு உபத்திரவப்பட்டு புரட்டாசிமீ வரையில கோட்டையி லேயிருந்த பராக்குதுல்லா கல்லின்பேரில் இறங்கி, திருப்புவனம் போய்ச் சேர்ந்தான். கானுசாயபு அவர்களும் திரிசிரபுரம் கோட்டையி லிருக்கிற மீனாக்ஷிநாதபிள்ளை குமாரர் முத்தழகுபிள்ளை அவர்களும் வந்து கோவில்வாசல் பட்டணமெல்லாஞ் சுற்றிப்பார்த்து கானுசாயபு அவர்கள் சமுகத்திலேபோய் இந்தச் சன்னிதி மகாசன்னிதி, மகாதெய் வங்கள், கர்னாடகத்திட்டம் நடப்பிவிக்கவேணுமென்று சொல்லி கோவி லுக்கு முன் பின் அத்துப்படிக்கு கர்னாடகத்தில் நடந்தபிரகாரத்துக்கு கோவில் சீமையெல்லா மேழுகோவிலுக்கும் விட்டு சுவாமி திருவாலவா யுடையார்கோவிலுக்கும் சாந்தி சம்புரோக்ஷணையும் பண்ணுவித்து ராய கோபுரத்திலிருந்து பக்கிரியினுடைய நிசானையும் பிடுங்கி அவனையும் அடி தண்டமாக வடித்து மேட்டுக்கு அப்பாலே கொண்டுபோய்விட்டு,

கோவில்களுக்கு நித்தியப்படி தேர், திருவிழா, உற்சவாதிகளும் நடப்பி விக்கிறதற்கு மீ க-க்கு ஆயிரம் பொன்வீதம் வருஷத்திலே கஉ௲- பொன்வீதம் நடப்பிவிக்கச் சொல்லி ஸ்தலத்தார் நிருபகிராமம் கட்டளைக் கிராமம் அர்ச்சனுபாகக் கிராமம் விட்டுக்கொடுத்து நடப்பித்துக்கொண்டு வந்தார்கள். இந்தப்பிரகாரம் ராஜ்யம் ஆளுகையில் புதுச்சேரி பரங்கி களுக்கும் தேவனும்பட்டணம் பரங்கிகளுக்கும் கலாபம்வந்து திரிசிர புரம் கோட்டைவரைக்கும் புதுச்சேரியார் கட்டிக்கொண்டு இருக்குமிடத் தில், இவ்விடத்திலிருந்து கானுசாயபு அவர்களும் முத்தழகுபிள்ளையும் திரிசிரபுரங் கோட்டைக்குப்போய், புதுச்சேரிப் பரங்கிகளைத் தொம்ச மாய் அடித்து அவர்கள் கட்டின சீமையெல்லாம் கட்டிக்கொண்டு தேவ னும் பட்டணத்தில் கபித்தானைச் சந்திக்குமிடத்தில், கபித்தான் சகல விருதுங்கொடுத்து வெகுமதியுஞ்செய்து, பிரமாதி ௵ வைகாசி மீ மதுரை வந்து சேர்ந்தார்."

"பிரமாதீச௵ முதல் சித்திரபானு௵ வரைக்கும் ஸ்தலத்தார், கிராமம் பூமிகளுக்குள்ள பொறுப்பும் வாங்கிக்கொண்டு கிராமங்களும் விட்டு, கோவில்பூஜைக்கு ௵ க-க்கு ஆயிரம்பொன் திட்டப்படிக்கு நடப்பிவித்துக்கொண்டு வந்தார்கள். சுபானு௵ புரட்டாசிமீ முதல் தாருண௵ புரட்டாசிமீ வரைக்கும் சென்னபட்டணம் வெள்ளைக்கார ரில் மேஸ்தர் கர்னல்பிரேஷ்டனும் வெகுபேர் வெள்ளைக்காரரும் நவாபும் மமுதிலீகான் நவாபுசாயபு அவர்களும், மாபோசு கான்சாயபு அவர் களும், சேதுபதி உடையாத்தேவர் தொண்டைமான் முதலான பாளையப் பட்டுச்சனங்களும் வந்துகோட்டையைச் சுற்றிவளைந்துகொண்டு அடை கோட்டைப்பட்டது. சகாப்தம், ௲சா௱அயிசு-க்குமேற் செல்லாநின்ற தாருண௵ ஐப்பசிமீ ௨-உ மம்மது இசுபுகானையும் பிடித்துத் தூக் கிலேபோட்டு நவாப்பு மம்மது லீகான்சாயபு அவர்களும் கோட்டைக் குள் பிரவேசமானார்கள். அப்போது ஸ்தானீகர் ஸ்தலத்தார் சகலமான பேர்களும் போய்க் கண்டார்கள். அப்போது மதுரைச்சீமை அமில் அபு துலுகான்சாயபு அவர்களுக்கு உத்திரவானவயணம்-ஏழுகோவிலுக்கும் ௵-க்கு, ஆறாயிரம்பொன் பூஜைதிட்டம் பண்ணுவித்து ஸ்தலத்தார் கிராமம் பூமியும் விட்டு மாமூல்படிக்கு நடப்பிவைத்து, கோவிலுக்கு ஐந்நூறு ரூபாயுங் கொடுத்துச் சம்புரோக்ஷணையும் நடப்பிவைத்தார்கள்.

இந்தப்பிரகாரம் தாருணவரு முதல் விகுருதிவரு-வரைக்கும் மம்மது அபுதுலுகான்சாயபு அவர்கள் துரைத்தனம். வரு-எ. கர-வரு முதல் ஹேவிளம்பி-வரு வரைக்கும் மோதீன்சாயபு அவர்கள் துரைத்தனம். மல்லாரிராயரவர்கள் துரைத்தனம் வரு-உ. அப்போது துபாசி வெங்கிடேசுவரமுதலியார் கோவில் பூஜைக்கு ஏற்றுக்கொண்டு ஆறுயிரம் பொன் ரொக்கம் வாங்கிக் கோவிற்பூஜை நடப்பிவித்துவந்தார்கள்."

"விளம்பிவரு காதருசாயபு அவர்கள் துரைத்தனம் வரு க. விகாரி வரு கயாலாபெகுகான்சாயபு அவர்கள் துரைத்தனம் வரு க. சார்வரி வரு முதல் பிலவவரு வரைக்கும் வரு உ-மல்லாராயரவர்கள் துரைத்தனம். சுபகிருதுவரு முதல் குரோதிவரு வரைக்கும் வரு ங-க்கு மேஸ்த்தர்ட்டேரியன் துரையவர்கள்நாளையில் கித்தலூர் வெங்கிட்டராயரவர்கள் அதிகாரத்தில் நவாபு சாயபு அவர்கள் பர்வாணுப்படிக்குக் கோவிற் பூசை ஆறுயிரம்பொன் திட்டம்பண்ணினபடிக்கு நடத்திவைத்து ஸ்தலத்தார் நிர்வாகக்கிராமங்கள், கட்டளைக்கிராமங்கள் அர்ச்சனுபாகக் கிராமங்கள் பட்டர்வீதி சகலமும் விட்டு நடப்பிவித்துவந்தார்கள். விசுவாவசுவரு தீவாணத்தமிலாய் செகுமம்மதுசாயபு அவர்கள், அமுல் பண்ணினுர்கள். பராபவவரு சுப்பாராயரவர்கள் அமுல் பண்ணினுர்கள். பிலவங்கவரு இராமசாமி ஐயனவர்கள் அமுல் பண்ணினுர்கள். கீலகவரு முதல் சௌமியவரு மாசிமீ வரைக்கும் சுப்பாராயரவர்கள் அதிகாரம். சௌமியவரு பங்குனிமீ முதல் சாதாரணவரு ஆவணிமீ வரைக்கும் ராமசாமி அய்யனவர்கள் அதிகாரம் பண்ணினுர்கள். சாதாரண வரு புரட்டாசிமீ கும்பினியாருக்குச் சீமையாகி மேஸ்தர் மக்களேட்டு துரையவர்கள் விரோதிகிருதுவரு வரைக்கும் அதிகாரம் பண்ணினுர்கள். அவர்கள் அதிகாரத்தில் நவாபு சாயபு அவர்கள் பர்வாணுப்படிக்கு நடப்பிவித்தார்கள். அதன்பிறகு, பரீதாபிவரு காதருசாயபு அவர்கள் அதிகாரம் பண்ணினுர்கள். பிரமாதீசவரு முதல் ஆனந்தவரு வரைக்கும் இரண்டுவரு இராமசாமி அய்யனவர்கள் அதிகாரம் பண்ணினுர்கள். ராக்ஷசவரு நளவரு வரு உ-க்கு பொக்ஷதார் வெங்கிட்டராயரவர்கள் அதிகாரம் பண்ணினுர்கள்."

"பிங்கள, காலயுக்திஷூ ஷூ உ ராமசாமி ஐயனவர்கள் அதிகாரம் பண்ணினார்கள். சித்தார்த்திஷூ ராவோபண்டிதரவர்கள் அதிகாரம் பண்ணினார்கள். ரௌத்திரிஷூ நாராயணராயரவர்கள் அதிகாரம். அது வரைக்கும் கோவிற் பூசையும் மாமூல்படிக்கு நடப்பிவித்து நிர்வாகக் கிராமங் கட்டளைக்கிராமம் முதல் நடப்பிவித்தார்கள். ரௌத்திரி ஷூ ஆனிமீ ரு-உ முதல் துன்முகிஷூ ஆடிமீ உ௰ரு-உ வரைக்கும் மீறு அல்தாகான்பாதரவர்களுக்குச் சீமையாய் ரெங்காராயரவர்கள் அதிகாரம் பண்ணினார்கள். அவர்களும் மாமூல்படிக்கு நடப்பிவித்தார்கள். அப்பால் துன்முகிஷூ ஆடிமீ உச-உ மகாராஜ மான்யராஜ ஸ்ரீ: கும்பினியாரவர்கள் பாரிசமாகி மாமூல்படிக்கு நடப்பிவிக்கிறார்கள்."

"சாலிவாகன சகாப்தம் ௲எ௱உரு கலியப்தம் சஅ........உ இதன் மேற் செல்லாநின்ற துன்முகிஷூ ஆடிமீ உசஉ திசா......ம............ கோட்டுமாசதி மகாசாமனிய....ர......கும்பினியாரவர்கள் பரிசம் சீமை செப்பித்தியாய திண்டுக்கல் சீமை ஒட்டுக்கும் கலெக்ட்டராயிருக்கிற மகா-ஈ-ஈ-ஸ்ரீ மேலூர் ஆற்டீசுசாயபு அவர்கள் மதுரைச் சீமைக்கும் கலெக்டராய் சீமைசேர்ந்தபடியினாலே உடனே மதுரைக்குச் சின்னத்துரை மகா-ஈ-ஈ-ஸ்ரீ கியானேசாயபு அவர்களும், பேஷ்கார் பீமராயரவர்களும் மதுரைச்சீமைக்குப் பேஷ்கார், நாராபணராயரவர்களும் உச-உ வந்து சேர்ந்தார்கள். சின்னத்துரையாகிற மகா-ஈ-ஈ-ஸ்ரீ கியானே சாயபு அவர்கள் உரு-உ வந்து சேர்ந்தார்கள். சீமையெல்லாம் கும்பினியார் அவர்களுடையதாகையினாலே கான்சாயபு அவர்கள் அரமனைக் கச்சேரியில் கச்சேரி பண்ணினார்கள். அவர்களுடைய பயத்தினாலே சீமையாதி யந்தம் வணங்கிக்கொண்டு வெகுவாய் பயந்து நடந்தார்கள்."

(முற்றும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

## திருவாலவாயுடையார் கோவில்,

# திருப்பணி விவரம்.

௧. சுவாமியினுடைய அஷ்டகஜவிமானந் தேவேந்திரன் பிரதிஷ்டை.

௨. சுவாமிகோவில் அர்த்தமண்டபம் மணிமண்டபம் மகாமண்டபம் ஆறுகாற்பீடம் சன்னிதிக்கோபுரம் மூலப்பிராகாரத்திருமதில்களும் சூழப்பத்தியும் நாயகர்கோவிலும் சூரியாதி சண்டேசுவர தேவதை பிராகாரத் திருமதிலும், கோட்டையகழும், கோட்டைக்கு வெளியில் கீழைத்திக்கில் ஐயனார்கோவிலும், தெற்குத்திக்கில் சத்தமாதாக்கள் கோவிலும், விநாயகர்கோவிலும், மேற்குத்திக்கில் ருத்திரன்கோவிலும், வடதிக்கில் எண்டோள் காளிகோவிலும் குலசேகரபாண்டியன் பிரதிஷ்டை செய்தவை.

௩. சித்தர்கோவில் விக்கிரமபாண்டியன் பிரதிஷ்டைசெய்தது. சுவாமிகோவி லிரண்டாம் பிராகாரத் திருமதிலும் ஒன்பதுநிலைப் பெரிய கோபுரமும் அம்மன்கோவி லிரண்டாம் பிராகாரத்திருமதிலும் சன்னிதி மண்டபமும் சுந்தரபாண்டியன் செய்வித்தவை-சாலிவாகன† சகாப்தம் ௲௱௪0.

௪. அம்மன்சன்னிதி மூன்றுநிலைக்கோபுரம் ஆனந்தத்தாண்டவ நம்பி செய்வித்தது—சகாப்தம் ௲௱௫0.

௫. மாடவீதியாகிய ஆடிவீதிப் பெரியதிருமதில்— திருநோக்கழகியார் செய்வித்தது—சாலிவாகன சகாப்தம் ௲௫0௬.

௬. ஆடிவீதி மேற்கு ஒன்பதுநிலைப் பெரியகோபுரம்—பராக்கிரமபாண்டியன் செய்வித்தது, சகாப்தம்—௲௨௪௫.

† சாலிவாகனசகாப்தம்—நிகழும் ருதிரோற்காரி வருஷத்துக்கு—௲௮௪௪ (1844) ஆகும்.

எ. சுவாமி சன்னிதி அஞ்சுநிலைக்கோபுரம் செய்தது வசுவப்பன்—சகாப்தம்-கூஉகூச.

ஷை கோவி லிரண்டாம்பிராகார மேல்புறம் ஐந்துநிலைக்கோபுரஞ் செய்தது—மல்லப்பன்—சக-கூஉகூகூ.

அ. அம்மன்கோவில் முதற்பிராகாரச் சுற்றுமண்டபமும் பள்ளியறையும் ஆறுகாற்பீடமும் நாயகர்சன்னிதி மண்டபமும் செய்வித்தது-மாவலி-சக-கூநஎச.

கூ. மண்டபநாயகமும் சின்னீசுரமும் செய்வித்தது—சின்னப்பன்—சக-கூசசஅ.

க0. சுவாமிகோவில் இரண்டாம்பிராகாரத் தெற்கு ஐந்துநிலைக்கோபுரம்—செவ்வந்திமூர்த்தி செய்வித்தது, சகாப்தம்-கூசஅக.

கக. ஷை பிராகார வடக்கு ஐந்துநிலைக்கோபுரம்—செவ்வந்திவேலன் செய்வித்தது-சக-கூசஅஉ.

கஉ. ஆடிவீதித் தெற்கு ஒன்பதுநிலைக்கோபுரம்—சிராமலைச்செவ்வந்தி செய்வித்தது-சக-கூச00.

கந. சுவாமி சன்னிதியில் துவாரபாலகர்மண்டபம் பொற்றாமரை வடபுறமண்டபம்—பெருமாள் செய்வித்தது-சகா-கூசஅச.

கச. அம்மன்சன்னிதி சங்கிலிமண்டபம்—திருவம்பலச்செட்டி செய்வித்தது-சக-கசஅச.

கரு. சுவாமிகோவில் முதற்பிராகாரக் கீழ்புறந் தென்புறம் மண்டபங்கள்-சக-கூசஅரு.

கசு. அம்மன்கோவி லிரண்டாம்பிராகாரக் கீழ்புறமண்டபம் பொற்றாமரை மேல்புறமண்டபம்-செட்டியப்பன் செய்தவை-சக-கூசஅரு.

கஎ. வன்னியடிச்சபை—செல்லப்பெண் செய்தது-கூசஅரு.

கஅ. சங்கிலிமண்டபத்துக்குத் தெற்கு மண்டபம்—திம்மப்பநாயக்கன் செய்வித்தது-சக-கூசஅசு.

கசு. • செவந்தீசுரம்—செவ்வந்தி செய்தது-சக-கூசஅசு.

௨௦. சுவாமிகோவில் முதற்பிராகார மேல்புறமண்டபம் அம்மன் கோவி லிரண்டாம்பிராகாரத் தென்புறமண்டபம்-சக-௲௪௮௭.

௨௧. சுவாமிகோவில் முதற்பிராகார வடபுறமண்டபம்—பட்டுத் திருமலைநாயக்கன், சக-௲௪௯௧.

௨௨. அம்மன்கோவி லிரண்டாம்பிராகார மேல்புற வடபுற மண்டபங்கள்—வீரகிருஷ்ணன் செய்வித்தவை, சக-௲௪௯௧.

௨௩. அறுபத்துமூவர்கோவில்மண்டபம் — நயினாமுதலி செய்தது, சக-௲௪௯௧.

௨௪. சன்னிதி ஏழுநிலைக்கோபுரம்—காளத்திமுதலி செய்தது, சக-௲௪௯௨.

௨௫. அம்மன்கோவி லிரண்டாம்பிராகார மேற்கு ஐந்துநிலைக் கோபுரம்—வீரத்தும்மசி செய்வித்தது, சக-௲௪௯௨.

௨௬. சுவாமிசன்னிதான துவஜஸ்தம்பமண்டபம், இரண்டாம் பிராகாரச்சுற்றுமண்டபம், சம்பந்தர்கோவில் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், ஆடிவீதி வடக்கு ஒன்பதுநிலைக்கோபுரம், மடைப்பள்ளி செய்வித்தது—கிருஷ்ணவீரப்பநாயக்கர், சக-௲௪௯௪.

௨௭. பொற்றாமரைக் கீழ்புற மண்டபமும், திருமதிற்படியும், குப்பையாண்டி செய்வித்தவை, சக-௲௪௯௫.

௨௮. செவந்தீசுரச்சுற்றுத்திருமதில் சன்னிதிமண்டபம் யொ... ளை.......மண்டபம்—சின்னச்செவ்வந்தி செய்தது, சகாப்தம்-௲௪௯௬.

௨௯. பொற்றாமரைத் தென்புறமண்டபம், படியும், திருமதிலும், விசுவநாதப்பிரதிஷ்டையும்—அப்பன்பிள்ளை செய்வித்தவை, சக-௲௫௦௦.

௩௦. சொக்கநாதர்மண்டபம்—வீரப்பன் வீரய்யன், சக-௲௫௦௦.

௩௧. சுவாமிகோவி லிரண்டாம்பிராகார நிருதிமூலை மண்டபம், விருப்பணன் செய்தது-சக-௲௫௧௦.

௩௨. வீரவசந்தராயமண்டபம்—முத்துவீரப்பநாயக்கர் செய்தது, சக-௲௫௩௩.

௩௩. அம்மன்சன்னிதி, முதலிப்பிள்ளை மண்டபம்—கடந்தை முதலி செய்தது-சக-௲௫௩௫.

௩௪. மீனாக்ஷிநாயக்கர்மண்டபம், ச...மு...கட்சி சக-௲௬௩0.

௩௫. கலியாணமண்டபம்—விஜயரங்கச் சொக்கநாத நாயக்கர் செய்தது-சக-௲௬௩௩.

௩௬. பேச்சக்கால் மண்டபம்—பிட்டுச்சொக்குப்பண்டாரம்—செய்தது-சக-௲௫௮0.

௩௭. ஆடிவீதி நிருதிமூலைமண்டபம்—தும்மச்சிநாயக்கர் செய்தது சக-௲௬௮0.

௩௮. ஆடிவீதி அக்கினிமூலைமண்டபம் — ஆறுமுத்தமுதலி செய்வித்தது-சகாப்தம்-௲௬௮௨.

௩௯. ஆடிவீதி ஈசானமூலை தட்டுச்சுற்றுமண்டபம்—வேங்கடேசுவரமுதலி—சக-௲௬௯௪.

௪0. சேர்வைகாரர்மண்டபம்—மருதப்பசேர்வைகாரர்-சக

———0———

# மதுரையாண்ட நாயக்கவரசர்கள்.



மதுரையிற் சரியான பாண்டியர்க ளிருந்து ஆண்டுவராமையால், குடிகள் கஷ்டப்படுவதைக்கண்டு விஜயநகர ஸம்ஸ்தானத்தார் அப்பாண்டியன் தலைநகருக்கு:—

கி. பி. 1404 வருஷம் இலக்ஷ்மணநாயுடுகாரையும்
ஷை 1449-1500 வருஷம் நரசநாயுடுகாரையும்
ஷை 1451 ஷை முத்தன்னநாயுடுகாரையும்
ஷை 1500-1515 வருஷம் தென்னம்மநாயுடுகாரையும்
ஷை 1515-1519 வருஷம் நரசிம்மநாயுடுகாரையும்
ஷை 1519-1524 வருஷம் குருகுரு திம்மநாயுடுகாரையும்
ஷை 1524-1526 வருஷம் கட்டியம் காமயநாயுடுகாரையும்
ஷை 1526-1530 வருஷம் சின்னப்பநாயுடுகாரையும்
ஷை 1530-1535 வருஷம் ஜகதேவநாயுடுகாரையும்
ஷை 1535-1544 வருஷம் விசுவநாதநாயுடுகாரையும்
ஷை 1544-1545 வருஷம் வருதப்பநாயுடுகாரையும்
ஷை 1545-1546 வருஷம் தொம்பச்சிநாயுடுகாரையும்
ஷை 1546-1547 வருஷம் விசுவநாதநாயுடுகாரையும்
ஷை 1547-1558 வருஷம் விட்டலநாயுடுகாரையும் பிரதிநிதிகளாக அனுப்பி ஆண்டுவரச் செய்தார்கள்.

விஜயநகரத்தின் ஸம்ஸ்தானம் அச்சுததேவராயலு காலத்தில் (கி. பி. 1559-ஆம் வருஷம்) பாண்டிய நாடு ஸ்வாதீனமாகி, விசுவநாதநாயுடுவைத் தமது பிரதிநிதியாக நியமித்தார்கள். அவர் சந்ததி வமிசாவளி விவரமாவது:—

1. நாகமநாயுடுகாரு கி. பி. 1538 வருஷம்.
2. விசுவநாதநாயுடு (1) 1559-1563.
3. குமாரகிருஷ்ணப்பநாயுடு 1563-1573.
4. கிருஷ்ணப்பநாயுடு, பெரிய வீரப்பநாயுடு, விசுவநாதநாயுடு 1573-1595
5. லிங்கயநாயுடு, விசுவநாதநாயுடு 1595-1602.
6. முத்துகிருஷ்ணப்பநாயுடு 1602-1609.
7. முத்துவீரப்பநாயுடு 1609-1623.
8. திருமலைநாயுடு 1623-1659.
9. முத்து அளகிரிநாயுடு 1659-1660.
10. சொக்கநாதநாயுடு 1660-1682.
11. முத்துலிங்கய்யநாயுடு 1677-1682.
12. இரங்ககிருஷ்ண முத்துவீரப்பநாயுடு 1682-1689.
13. மங்கம்மகாரு 1689-1704
14. விஜயரகுநாத சொக்கலிங்கநாயுடு 1704-1731.
15. மீனாக்ஷியம்மகாரு 1731-1736.
16. பங்காரு திருமலைநாயுடுகாரும், விஜயரகுநாதநாயுடுகாரும் 1736.

இப்படிப் பாண்டியநாட்டில் 16 நாயுடுகாரு சந்ததிகள் ஆண்டுவந்தார்கள். இவர்கள்காலத்தில் பாண்டியநாடு பலவிதத்திலும் சீரும் சிறப்பும் பெற்றுப் பிரகாசித்தது. அப்படி ஆண்டவர்களுடைய அழகிய சரித்திரங்களைச் சரித்திர நூல்களிற் கண்டுகொள்க.

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாயுடையார்கோயில்

# திருப்பணிமாலை.



## தேவேந்திரன் செய்தது.

எண்ணரிய தானசதுர் யுகந்தனக்கு முன்ன
  மிந்தவுல கத்தடைந்து கடம்பவனத் தெய்திப்
புண்ணியத்தெண் ணீரம்பொற் றாமரையி லாடிப்
  பொற்கமலங் கொய்துகடம் பாடவிநா யகனைத்
தண்ணளியா லருச்சனைசெய் தட்டகசந் தாங்குந்
  தமனியவிந் திரமான மெனுங்கருப்பக் கிரகம்
விண்ணுலகு மண்ணுலகும் பணிந்தேத்த வமைத்தான்
  விருப்பொடுதே வேந்திரனும் விண்ணவர்நா யகனே. (க)

## வெள்ளையானை.

ஆங்கதன்பின் றுருவாசன் சாபமதா லேகாட்
  டானையா யுழன்றுகடம் பாடவிசேர்ந் தம்பொற்
பூங்கமலத் தடம்படிந்து பழையவடி வடைந்து
  புங்கவனைப் பூசித்துத் தன்பேரான் மேல்பால்
ஓங்குகணே சனுமானை யூருணியுஞ் சமைத்தவ்
  வுயர்வனத்தின் கிழக்கயிரா வதநல்லூர் வகுத்துப்
பாங்குடனிந் திரேசுரனைத் தன்பேராற் பதிட்டை
  பண்ணியதா லெழிலயிரா பதமதவா ரணமே. (உ)

---

க. இத்திருப்பணிவரலாறு திருவிளையாடற்புராணம் இந்திரன்பழிதீர்த்த படலத்துக் காண்க.

உ. இத்திருப்பணிவரலாறு ஷை நூல் வெள்ளையானை சாபந்தீர்த்த படலத்துக் காண்க. வெள்ளையானை பிரதிஷ்டைசெய்த கணேசருக்கு ஐராவத கணேசர் என்பது திருநாமம். அவ்வானையால் உண்டாக்கப்பெற்ற தீர்த்தம் யானையூருணி எனவும் கணபதியேந்தலெனவும் வழங்கும். மதுரைக்கு மேற்கே யுள்ளது. அஃது உண்டாக்கிய ஊர் ஐராவதநல்லூர் என்பது: மதுரைக்குக் கிழக்கேயுள்ளது. ஐராவதத்தால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற சுவாமி ஐராவ தேசுவரர் எனப்படுவர்.

### குலசேகரபாண்டியன்.

மலைமகள் கோயிலு நாயகர் கோயிலு மாமதிளு
மலர்கதிர்ச் சூரிய னுதிசண் டேச்சுர னந்தமதா
யிலகிய சுற்றத் திருந்தவர் கோயிலும் யாவுஞ் செய்தான்
பலகலை தேரு முகில்குல சேகர பாண்டியனே. (௩)

திட்ட மொடுகடப் பங்காடு வெட்டித் திருத்தியண்ட
மட்டள வுங்கொத் தளக்கோட்டை யுஞ்சக்ர வாளமென
இட்ட முடன்கட்டு வித்திந்த்ர லோக மெனமதுரைப்
பட்டண முங்கண் டனன்குல சேகர பாண்டியனே. (௪)

பரர்சொக்க நாத னுரைப்படி கீழ்த்திசைப் பாங்காரி
யாபுத் திரன்சத்த மாதாக்கள் தென்றிசை யக்குடபாற்
கருணைப் புயலுத் தரங்காளி கூடலைக் காத்தளிக்கப்
பரிவிற் ப்ரதிட்டைசெய் தான்குல சேகர பாண்டியனே. (௫)

### மலையத்துவசபாண்டியன்.

சுருப்பணி தார்க்குல சேகர மாறன் றொடுத்தபடி
திருப்பணி பூசை மதுரே சருக்குச் சிறக்கச்செய்து
மருப்பணி சோலை மணலூருந் தந்தனன் வாய்த்தசெம்பொற்
பருப்பத மொத்த புயன்மலை யத்வச பாண்டியனே. (௬)

### சுந்தரபாண்டியன்.

சந்திர சேகரர் தென்மது ரேசர்தஞ் சந்நிதியில்
வந்தொரு கோபுர மாமக மேரு வளர்ந்ததெனச்
சுந்தர பாண்டியன் கோபுர மொன்று துலங்கச்செய்தான
மந்தர நேர்புயன் சுந்தர பாண்டிய மன்னவனே. (எ)

அந்தரி யங்கயற் கண்ணு யகிசெம்பொன் னாலயத்துட்
சுந்தர பாண்டிய மண்டப முஞ் சொக்க ராலயத்தே

---

௩, ௪, ௫. இவற்றைத் திருநகரங்கண்ட படலத்துக் காண்க. (௫) இப்போதுள்ள அம்மன்தேர்முட்டிக்கு மேல்பக்கத்து முடுக்கிலிருந்த வெண்கலமடை ஐயனார் கோயிலே இதிற்கூறப்பட்ட மகாசாத்தாகோயில் என்பர்.

எ. சுந்தரபாண்டியன்கோபுரம் சுவாமிசந்நிதிக் கீழைப் பெரியகோபுரம்.

சுந்தர மாறன் திருமா மதிலுந் துலங்கச்செய்தான்
பைந்தமிழ் சந்தத முந்தெரி சுந்தர பாண்டியனே. (அ)

திருநடு வூர்த்தென் மதுரையிற் செய்த திருநகரின்
மருவிய கோயிலொன் றுண்டாக்கி யேயிம் மையினன்மையைத்
தருசிவ லிங்கப் பதிட்டைசெய் தர்ச்சனை தானுஞ்செய்தான்
பருமலை யன்னசெம் பொற்புயன் சுந்தர பாண்டியனே. (௯)

விக்கிரமபாண்டியன்.

கல்லானை யானதை யெல்லாருங் காணக் கரும்புதந்த
வெல்லாமம் வல்லசித் தர்க்குப்பொற் கோயி லினிதமைத்தான்
வல்லாரில் வல்லவன் சந்த்ர குலேசன் மகாமன்னவன்
பல்லாரும் போற்ற வருகூடல் விக்ரம பாண்டியனே. (௧௦)

மட்டா ரலங்கல் புனைசோழன் விட்ட மதகளிற்றைக்
கட்டா ரழல்விழிச் சிங்கக் கணைதொட்டுக் காய்ந்தசொக்கர்க்
கட்டாலை மண்டப முண்டாக்கி னனல் லறந்தழையப்
பட்டாபி டேகம் புனைகூடல் விக்ரம பாண்டியனே. (௧௧)

பராக்கிரமபாண்டியன்.

சிரமேவு கங்கை யணிசொக்க நாதர்க்குச் சீர்பெறவே
வுரகா திபனுறை பாதலம் பேதித் துவானங்கட்டித்

---

௯. திருநடுவூர் என்பது மேலைமாசிவீதிக்கு மேற்கேயுள்ள இம்மையே நன்மைதருவாருள்ள இடம். இதிலுள்ள ஸ்வாமிக்கு இஷ்டப்பிரதாயகர் இம்மையே நன்மைதருவார் எனவும்; அம்பிகைக்கு மத்தியபுரநாயகி நடுவூர் நாயகி எனவும் திருநாமங்கள் வழங்கும். (எ, அ, ௯.) இத்திருப்பணிகளைச் சுந்தரபாண்டியன் செய்தகாலம் சகாப்தம் ௧௧௪௦. (கி பி. 1218) என்று தெரிகிறது. [திருவாலவாயுடையார்கோயிற்றிருப்பணி விவரம்-ரு.]

௧௦, ௧௧. இப்பெயர்பெற்ற பாண்டியன், ஜடிலவர்மன் சுந்தரபாண்டியனை யடுத்துப் பட்டமடைந்தவன் என்பர். (செந்தமிழ் தொகுதி ௪. பக்கம் ௪௯௦. பாண்டியசாஸனங்கள்) அட்டாலைமண்டபம் இப்பெயருள்ள மண்டபமொன்று பண்டைக்காலத்தில் கீழைக்கோட்டைமதிலைச் சாரவிருந்ததென்று தெரிகிறது; இக்காலத்து மண்டியூர்த் தெப்பக்குளத்தின் வாயுமூலையில் ௧௬-கால்களால் ஆகியதோர் மண்டப மிருக்கிறது. இதற்கு வடக்கேயுள்ளது யானைமலை. (பழைய திருவிளையாடற்பதிப்பு ருரு-ம் பக்கக் குறிப்பு.)

திரமேவு மேரு வெனக்கோ புரமேற் றிசையமைத்தான்
பாராசர் நாளும் பணியும் பராக்ரம பாண்டியனே. (கஉ)

### ஆனந்தத்தாண்டவநம்பிகற்பாள்.

கன்னலுஞ் செந்நெலுஞ் சூழ்செல்வி நாடன் கவுணியர்கோன்
நன்னர்க ளெண்ணிய வானந்தத் தாண்டவ நம்பிகற்பாள்
தென்னவர் போற்றிய வங்கயற் கண்ணம்மை செல்விதிருச்
சன்னிதிக் கோபுரங் கட்டினள் தன்மந் தழைக்கவென்றே. (கங)

### விசுவப்பநாயக்கர்.

எண்ணிய கோபுரம் நாயகன் கற்படை யீங்கிதனுக்
கண்ணிய கீழ்பால் விசுவீச் சுரமுமொன் றுங்கமைத்தான்
மண்ணுல கேத்தும் புகழீ சுரன்றன் மதலைநண்பு
நண்ணிய வத்தி கிரிவாழ் விசுவப்ப நாயக்கனே. (கச)

### செல்லப்பெண், மாணிக்கம்.

வன்னி யடியில் நடராச மூர்த்தியின் மண்டபமுந்
தன்னியல் போதி னுலேயொ ருரையுந் தந்தன்பினுற்
கன்னியர் போற்றுந் திருமலை மாணிக்கங் கண்டளித்தாள்
இன்னருட் கந்தனைச் செய்தனள் செல்லப்பெண் ணென்பவளே. (கரு)

---

கஉ. இப்பாண்டியன் இத்திருப்பணிசெய்த ஸ்ரீ சகாப்தம் கஉசரு. (கி. பி. 1323) இவ்வரசன், வாளால் விழித்துறங்கும் பராக்கிரமபாண்டியன் என வழங்கப்படுவன்.

கங. கற்பாள்-பத்தினியார்: மனைவியார். ஆனந்தத்தாண்டவநம்பி என்பவர் வேம்பத்தூர்ச் சோழியப்பிராமண வகுப்பினரும், திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணமியற்றிய பெரும்பற்றப்புலியூர் நம்பியின் வம்மிசத்தவருமாவர் என்பர். இவர்காலம் சகாப்தம் ககடுo. (கி. பி. 1227-1228) [மஹாமஹோபாத்தியாயர் ஸ்ரீ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பித்த பழைய திருவிளையாடற்புராணத்து நூலாசிரியர்வரலாறு பார்க்க.]

கச. விசுவீச்சுரம் - சுவாமிசந்நிதிக் கீழைப் பெரிய கோபுரத்தின் வடபுறத்தே திருமதிலையொட்டியிருந்தது என்பர்.

கரு. செல்லப்பெண் திருப்பணிசெய்த ஸ்ரீ சகாப்தம் கசஅரு. (கி. பி. 1513) [திருவாலவாயுடையார்கோயிற்றிருப்பணி விவரம்-கஎ.] மாணிக்கம் பட்டி என்னும் கிராமமொன்று மதுரைத் தேவஸ்தானத்துக்கு உண்டு.

அன்னக் குழியு மான்றிருக் கோயிலு மாங்கவற்கு
மன்னப் பெரிய மலைகுடைந் தாலன்ன மண்டபமுந்
தன்னை யொப்பி லாத மதுரேசற் கென்றினி தாவமைத்தாள்
மன்னிச் செறியு மதுரேச மாணிக்க மாமயிலே. (கசு)

நல்லபெண்.

மண்ணிலுள் ளோர்களும் யாவரும் போற்று மதுரைச்சொக்கர்க்
கண்ணிய சந்நிதி வாசலி லேநல் லழகுபெறத்
திண்ணிய பேரருள் நந்தீ சரைப்பிர திட்டைசெய்தாள்
பெண்ணினி னல்லபெண் ணென்றே பெயர்மிகப் பெற்றவளே. (கஎ)

கம்பணவுடையார்.

பின்னொரு காலந் திருக்காப்பு நீக்கித்தன் போன்பினால்
முன்னுள வூர்களும் பின்புதி தாய்விட்டு முக்கணர்க்கு
மன்னிய பூசை திருப்பணி கூடல் வளரச்செய்தான்
கன்னியும் பொன்னியுங் கங்கையுங் கொண்டருள் கம்பணனே. (கஅ)

கம்பலராயன்.

எண்டிசை யெண்தெட்ச ணாமூர்த் தியினுக் கெழின்மண்டபம்
பண்டயன் மாலடி கண்டறி யாதலிங் கோற்பவர்க்கு
மண்டபந் துர்க்கைக்கு மண்டபங் கூடலில் வாய்க்கச்செய்தான்
வண்டவிழ் தார்ப்புயன் கம்பல ராய மகிபதியே. (கசு)

---

கசு. அன்னக்குழிமண்டபம் மதுரை மேலைச்சித்திரைவீதியிலுள்ளது.

கஎ. நந்தீசுரர்சந்நிதி-சுவாமிசந்நிதியில் வடக்குமுகமாகத் திருவாயிலினுட் பக்கத்து உள்ளது.

கஅ. இவர் விஜயநகரஅரசரால் அனுப்பப்பட்டுத் தென்னாட்டைஜயித்து, அவர் பிரதிநிதியாக ஆண்டவர். மகமதிய அரசரால் மதுரைக்கோயில் அழிபட்டதுகேட்டு, கி. பி. 1372-ல் மதுரைநோக்கிப் படையெடுத்துத் துருக்கர்களை வென்று, கோயிலைத் திருக்காப்புநீக்கி, பழையபடியே வேண்டிய சிறப்பெல்லாஞ் செய்வித்து ஸம்ரக்ஷித்தார். இவர் வீரசைவ வகுப்பினரென்பர். (Nelson's "The Madura Country." Part III. pp. 81.)

கசு. இப்பாட்டிற்கண்ட மூன்று மண்டபங்களும் சுவாமியின் கருப்பக்கிரக விமானத்தோடுசேர்ந்து, தெற்கு மேற்கு வடக்குப் பிராகாரங்களில் முறையே உள்ளவை.

மாவலி.

மன்னன் குலசேகர பாண் டியன்செய்த மாமண்டபம்
பின்னொரு காலத் தரைகுறை தீர்த்துப் பிறங்கச்செய்து
பொன்னின் றிருவா பரணம் பலபுதி தாகத்தந்தான்
மன்னும் புகழ்த்திரு மாலிருஞ் சோலை மகாவலியே. (உ0)

பாருசூழ் சுடரிலைவேற் குரிசில்குல சேகரபாண் டியன்றான் செய்த
ஆறுகாற் பீடத்திற் சிலபழைய தைப்புதிதா வழகிற் செய்து
வீறுசேர் நாயகர்சந் நிதித்திருக்கா வணப்பத்தி விளங்க வைத்தான்
தேறுநீர்க் கடலுலகெண் சுந்தரமா வலிகீர்த்திச் செல்வன் றானே. (உக)

மந்திர மிக்க கயற்கண்ணி சந்நிதி மாமண்டபஞ்
செந்திரு வம்மை முதற்பிரா காரத் திருமண்டபஞ்
சுந்தரப் பள்ளி யறைவகுத் தான்றன்ன லார்வணங்க
வந்தரு ளுந்திரு மாலிருஞ் சோலை மகாவலியே. (உஉ)

செவ்வந்திமூர்த்திசெட்டி.

தேனா றியதிரு வாயிலிற் கோபுரஞ் செங்கற்படை
வானு ரிடைக்கட்டு வாயிலிற் கோபுரம் வானமுத
லானுதை கற்படை செங்கற் படைமுதல் யாவுஞ்செய்தான்
மானு கரன்செட்டி செவ்வந்தி மூர்த்தி வரோதயனே. (உ௩)

---

உ0. பாண்டிநாட்டுத் திருமாலிருஞ்சோலைப்பக்கத்தே, நடுநாட்டிலிருந்த வாணவமிசத்தார், சகாப்தம் 15-வது நூற்றாண்டில் ஆண்டுவந்தார்களென்பதற்கு சாஸனங்கள் உண்டென்பர். (செந்தமிழ். தொகுதி ௪, பக்கம் ௬௨௭) சுந்தரமாவலி என்பவன் இத்திருப்பணிகள் செய்தகாலம் சகாப்தம் ௧௩௭௪. (கி. பி. 1452) இவன் சுந்தரத்தோண்மாவலிவாணதிராயன் எனவும் வழங்கப்படுவன். "குலசேகரன்செய்த மாமண்டபம்"—நடராஜர் எழுந்தருளியிருக்கும் சந்நிதிமண்டபம்.

உக. "வீறுசேர்நாயகர் சந்நிதித் திருக்காவணப்பத்தி"—உற்சவமூர்த்தி எழுந்தருளியிருக்கும் மண்டபம்.

உ௩. இடைக்கட்டுவாயிலிற் கோபுரம்-முக்குறுணியரிசிப்பிள்ளையார் சந்நிதிக்கு எதிரிலுள்ளதும், அம்மன் சுவாமிகோயில்களுக்கு மத்தியிலுள்ளதுமான திருவாயிற்கோபுரம், இத்திருப்பணி நடந்தது சக௰௪௮௧. (கி. பி. 1559.)

### வீரப்பன்.

கூடலம் பதியிறைவர் முன்வெள்ளி விடையமுது
குலவியிட வொருகல்லினாற்
குறடுகோ புரவாயி லிற்கதவு தென்வாயில்
கொள்சுருட் படிபாமனு
ராடுமா மண்டபத் தளவிசை திருப்பள்ளி
யறையிலுயர் படிகளுமையா
ளாலயத் தளவிசை திருக்கதவு பல்லக்கொ
டானபொற் பட்ட மழகா
ரோடைசூழ் வீரப்ப னற்றேப்பு மத்தோப்பி
லோங்குமுயர் மணிமண்டபம்
ஓதுமிவை போலினிய பணிவிடைகள் சொக்கருக்
கொருமையுட னேயுதவினான்
மேடையும் மாடரங் கெங்குமட வார்கள்பயில்
வீதிசூழ் தாணையதிபன்
வேதியர்கள் காவலர்க ளுவலர்கள் வாழவரு
வீரையன் வீரப்பனே. (உச)

### திம்மப்பநாயக்கர்.

கண்டர கண்டன் குறடுங் கனபுரு ஷாமிருக
மண்டப முங்கண் டரகண்டன் தோப்பும் வளம்பெறவே
யெண்டிசை போர்புக ழுஞ்சொக்க நாதர்க் கினிதமைத்தான்
திண்டிறற் றிம்மப்ப நாயக்கன் கீர்த்திச் செய துங்கனே. (உரு)

### கம்பலராசி.

கண்டர கண்டன் குறட்டுக்கு முன்னான் கு காலிலொரு
மண்டப மும்மண் டபமேற் சிகர மும் வாய்த்திலங்க
விண்டர வோங்கு மிடபக் குறடும் விளங்கச்செய்தா
னெண்டிசை யோர்புகழ் கம்பல ராசி யெனுமன்னனே. (உசு)

---

உச. இவர், விஜயநகர அரசாது பிரதிநிதியாக மதுரையிலிருந் தாண்டவர். இவர் தந்தையார் கிருஷ்ணப்பநாயக்கர். இவர் திருப்பணிசெய்தகாலம் சக-கரு00 (கி. பி. 1578.)

உரு. இவர் விஜயநகர அரசாது பிரதிநிதியாய்வந்து மதுரையை ஆட்சி செய்தவர். திருப்பணி செய்த காலம்—சக—கச௮சு. (கி. பி. 1564.)

சிராமலைச் செவ்வந்திமூர்த்திச்செட்டி.

சிகார சலச்சிலைச் சொக்கர்க்குச் செம்பொற் சிகரங்கள்சூழ்
மகமே ருவையொரு கோபுர மாக வகுத்ததெனத்
தகவாக வேதெற்கு வாயிலிற் கோபுரந் தான்கட்டினான்
செகராசர் மெச்சுஞ் சிராமலை யாதிபன் செவ்வந்தியே. (உஎ)

சிற்பார் சொக்கர் மகிழ்ந்துறை செம்பொற் சிகரத்துக்குப்
பொற்குட முப்பத் திரண்டங் கயற்கட் புரிகுழலுக்
கற்புத மாகப்பொன் னிந்த்ரவி மானமுன் பாக்குவித்தான்
நற்றமிழ் தேர்செட்டி செவ்வந்தி மூர்த்தி நராதிபனே. (உஅ)

மற்றொப்பி லாவொரு பச்சைப் பதக்கமும் வண்பவளக்
கொற்றக் குடையு மொருவெள்ளிப் பாத்திர முங்கொடுத்து
நற்றிருக் கோயிற் றிருவம்ப லேசுர நன்கமைத்தான்
கற்றவர் தாபர மூர்த்திசெவ் வந்தி கனதுங்கனே. (உகூ)

அட்டதிக் கெண்ண வருலோக நாதன்முன் னன்பிற்செய்த
பிட்டுக்கு மண்சுமை மண்டப முன்பினும் பின்பெரிதாக்
கட்டுவித் துச்செழுங் காவுமுண் டாக்கினன் காசினியெண்
செட்டி சிராமலை மூர்த்தியன் பாகிய செவ்வந்தியே. (௩0)

பெருமாள்.

கொற்றஞ்செய் சொக்கர்க்கு நான்கூருந் தந்நடிக் கோபுரத்தைப்
பற்றிய மண்டப முந்த்வார பாலரும் பார்வதிமுன்
னுற்றபொற் றாமரை மண்டப மும்படி யும்மிளையான்
பெற்றதெய் வங்கள் பெருமாள் வகுத்தனன் பேர்பெறவே. (௩க)

பட்டுத் திருமலைநாயக்கர்.

கங்காள நாத ரவர்க்குமுன் மண்டபங் காமர்வெள்ளிச்
சிங்கா சனந்திரு வாபா ணஞ்சில செய்தமைத்தான்
பங்கே ருகவயல் சூழ்தஞ்சை வாழும் பலவன்மைந்தன்
நங்கா ரெனவந்த பட்டுத் திருமலை நாயக்கனே. (௩உ)

---

உஎ. இவர் திருப்பணிகள் செய்த காலம் சக—கசஅக (கி. பி. 1559).

௩க. இவர் செய்தகாலம் சக—கசகக (கி. பி. 1569).

௩உ. இந்நாயக்கர் செய்தகாலம் சக—கசகக (கி. பி. 1569). கங்காளநாதர்—பிக்ஷாடனர்.

### திருவம்பலச்செட்டி.

தார்பணி பூங்குழ லங்கயற் கண்ணம்மை சந்நிதியிற்
கார்பணி யும்படிக் கேழுர்த்தி மண்டபங் கட்டுவித்தான்
சீர்பணி மார்பன் சிராமலைச் செவ்வந்தி செட்டிசெல்வன்
பார்பணி வேலப்பன் முன்னோன் றிருவம் பலச்செட்டியே. (௩௩)

### வேலப்பசெட்டி.

விஞ்சிய மூர்த்தீச் சுரம்விசு வீச்சுர மேருநிக
ரஞ்சு நிலைவடக் குக்கோ புரஞ்சொக்க ராலயத்துட்
செஞ்சொற் றளவிசை சந்நிதிப் பொற்கம்பஞ் செய்தமைத்தான்
கஞ்சக் கான்செட்டி செவ்வந்தி வேலன் கருணையனே. (௩௪)

### சங்கர நாகரசன்.

நிறையோடு சேர்ந்த திருநோக் கழகிய நீடவத்தோன்
முறையோடு செய்த திருமா மதிட்சுற்று முற்றுமரை
குறைதீரக் கட்டிப் புதுக்குவித் தான்புகழ் கொண்டசது
மறையோதுஞ் சங்கர நாகர சன்னெனு மாதவனே. (௩௫)

### வேள் மூர்த்திசெட்டி.

தாரணி சொக்கர்க்கு மாமண் டபத்துந் தனிமகர
தோரண மாக வொருதிப மாலையுஞ் சோலைகளுஞ்
சீரணி தாகவே யோர்திரு மண்டபஞ் செய்தனனும்
வாரணி கொங்கையர் வேண்மூர்த்தி செட்டி மகிபதியே. (௩௬)

---

௩௩. (உ௭-௩௦-ஆம்) பாடல்களிற் கூறப்பட்ட செவ்வந்திமூர்த்திசெட்டியின் புதல்வர் இவர். திருப்பணி நடத்தியது சக—௧௪௮௪ (கி. பி. 1562).

௩௪. இவர் முற்கூறியவர்க்குத் தம்பி; திருப்பணி நடத்தியகாலம்-சக—௧௪௮௨ [கி. பி. 1560] மூர்த்தீசுரம்-வண்டியூர்த் தெப்பக்குளத்து மேல்கரையில் உள்ளது; இப்போது முத்தீசுரம் என வழங்குகிறது. "அஞ்சுநிலை வடக்குக் கோபுரம்.-ஆடிவீதிக்குள்ளேயுள்ள வடகோபுரம்.

௩௫. திருநோக்கழகியார் சக—௧௫௦௬ [கி. பி. 1584]-ல் ஆடிவீதிப்பெரிய திருமதிற்றிருப்பணி நடத்தினரென்க. [திருவாலவாயுடையார் கோயிற்றிருப்பணி விவரம்—௫].

**சின்னப்பநாயக்கர்.**

திருமிகுதென் னவனடத்தா வணிமூ லத்தின்
 றிருநாட்குத் தேர்புதிதா வீதி யூர்கள்
மருவியசொக் கருக்கினிதாம் பூசை சந்தி
 மண்டபங்க ளுபகளு யகத் தூப் பத்தி
யருண்மி குசின் னீச்சுரமுத் தளக்கு வாயி
 லகவணைகள் புறவணைக ளன்பாற் செய்தான்
ஒருமைதிகழ் மல்லையசின் னப்ப பூப
 னேத்துபுகழ் சேர்குத்தி யூரான் றானே. (௩௭)

**துப்பையாண்டி.**

இந்திரன் போற்றிய பொற்று மரைக்கரைக் கேகிழக்காய்
வந்தொரு லிங்கங் குடிகொண்ட தென்ன மதின்மண்டபம்
அந்தம தாகக்கட் டிப்பிர திட்டைசெய் தானன்பினற்
செந்தமிழ் தேர்வழி யான் துப்பை யாண்டி திசைபெறவே. (௩௮)

**அப்பன்பிள்ளை.**

சுரர்புகழ்பொற் றுமரைக்குத் தென்மேற்குத் தனதுபிதாத்
 தொடுத்துச் செய்த
திருமதிண்மண் டபங்கர்ப்பக் கிரகஞ்சோ பானமுதற்
 சிறக்கச் செய்து
பெருகுபுகழ் விசுவநா தரைவிசா லாட்சிதனை
 ப்ரதிட்டை செய்தான்
தரைபுகழப் பன்பிள்ளை தருமப்பன் பிள்ளைவெகு
 தவத்தி னானே. (௩௯)

௩௭. சின்னீச்சுரம்-அம்மன்சந்நிதி மடைப்பள்ளிக்கு வடக்கில் மேற்குப் பார்த்திருப்பது. முத்தளக்குவாயில் ஷை சின்னீச்சுரர் சந்நிதியில் உள்ளது; இப்போது, அது "முத்துவழி" என வழங்குகிறது. சின்னப்பநாயக்கர் இத்திருப்பணிகள் நடத்தியது சக-௧௪௪௮. [கி. பி. 1526].

௩௮. இவர் திருப்பணிசெய்தகாலம்—சக-௧௪௯௫ [கி. பி. 1573].

௩௯. அப்பன்பிள்ளை திருப்பணிநடத்தியது சக-௧௫00 [கி. பி. 1578]. பொற்றுமரைக்குத் தென்புறமண்டபமும் படியும் திருமதிலும் விசுவநாதப்ரதிஷ்டையும் இவர் செய்தனவென்று தெரிகிறது. [திருவாலவாயுடையார் கோயிற் திருப்பணி விவரம்-௨௯].

### செட்டியப்பநாயக்கர்.

மன்னியமு லைக்கரையின் மண்டபமும் பொற்று
　　மரைக்குமேல் பான்மூர்த்தி மண்டபமுன் பாகத்
தன்னுடைய பெயராலோர் மண்டபமுங் கயற்கட்
　　டார்குழலி தன்னிரண்டாம் பிராகாரஞ் சூழும்
பன்னரிய திருச்சுற்று மண்டபமுஞ் சூழப்
　　பத்திகளும் பத்தியுட னேபணிந்து செய்தான்
தன்னிகரில் கச்சிவரு பொப்பணபூ பாலன்
　　றந்தமுகில் செட்டியப்பன் தரியலர்க ளரியே. (௪0)

### கிருஷ்ணப்பநாயக்கர்.

தாலம் புகழ்மயி லங்கயற் கண்ணம்மை சந்நிதியிற்
கோலஞ்செய் கோயிலொன் றுண்டாக்கிச் செல்வக் குமரர்தம்மை
ஞாலம் புகழப்ர திட்டைசெய் தானவ நாகரிகன்
சீலனறென் காசி வருபொம்ம நாயக்க கிருஷ்ணப்பனே. (௪க)

### தீத்தியப்பசெட்டி.

மதுரேச ருட்பிரா காரத்து மேல்புற மண்டபந்தண்
கதிர்வா னுதற்கயற் கட்கிரண் டாம்பிரா காரத்தினிற்
றிதமான தென்புற மண்டபஞ் செய்தனன் தீத்தியப்பன்
அதிரூப னுண்ட பெருமாள் குமார னருட்கொண்டலே. (௪௨)

### மூர்த்தியென்பவள்.

வாரார் முலையங் கயற்கண்ணி கோபுர வாயிறன்னிற்
றாரார் மேனிக் களிற்று னனன்றனைத் தாபித்தன்பாற்
சீரார்ந்த சோபிற் படியணுக் கச்திற் சிறக்கச்செய்தா
ளோரார்ந்த கூடலன் சந்நிதி வாழ்மூர்த்தி யென்பவளே. (௪௩)

---

௪0. இவர் திருப்பணி நடத்தியது சக-கச௮௫ [கி. பி. 1563].

௪௨. இத்திருப்பணிகள் நிகழ்ந்த காலம் சக-கச௮௭ [கி. பி. 1565].

## இலிங்கமநாயக்கர்.

அத்தர்தென் கூடற் பதிச்சொக்க நாதருக் கன்புடனே
முத்தளக் குங்கோ புரக்கற் படைக்குறை முற்றுஞ்செய்தான்
கொத்தளக் கோட்டை கொளும்விச்வ நாதன் குமரனென்னும்
தத்தளிக் கப்பொரு லிங்கம நாயக்க சற்குணனே. (சச)

## திம்முராவுத்தன்.

விண்டல மெண்ணு மெழுகட லுக்குத்தென் மேல்கரைமேற்
கண்டவ ருள்ளங் களிக்கவொர் மண்டபங் கட்டுவித்தான்
தண்டமிழ்க் கச்சி வளம்பதி வாழுஞ் சதுரனெங்குந்
திண்டருங் கீர்த்திக் கசுவப் பையன்திம்மு ராவுத்தனே. (சரு)

## இராமப்பநாயக்கர்.

தெண்டிரைக் கங்கைச் சடையாளர் சொக்கர்தெப் பத்திருநாள்
கொண்டரு ளும்படிக் கன்பொடு தெப்பக் குளக்கரையின்
மண்டபங் கட்டுவித் தான்பெத்த பூபதி மைந்தனுயர்
புண்டரி கத்திரு வாழ்கச்சி ராமப்ப பூபதியே. (சசு)

கம்பைய ராச குலாதிப னங்கயற் கண்ணம்மைக்குத்
[தம்பெயரால் வசந்த மண்டப மொன்றுதான் கட்டிக்கொடுத்]
தம்பிகை பாகர்க்கு மூன்றாருந் தந்தன னல்லன்பினல்
நம்பினர் தாபரம் பெத்தன்சொல் ராமப்ப நாயக்கனே. (சஎ)

---

சச. இவர், கி. பி. 1682 வரை ஆட்சிசெய்த முத்துவீரப்பநாயகர், அவர் குமாரர் சொக்கநாதநாயகர்—இவ்விருவரிடத்தும் பெரியசேனதிபதியாக விளங்கியவர் என்று தெரிகிறது.

சரு. இம்மண்டபம் சங்கிலிமண்டபத்துக்குத் தெற்குமண்டபமென விவரங்காணப்படுகிறது. [திருவாலவாயுடையார் கோயிற்றிருப்பணி விவரம்-கஅ]. இவர்க்கு வழங்கும் 'ராவுத்தன்' என்னுஞ் சிறப்புப்பெயர், குதிரைச்சேவகன் என்னும் பொருளில் வருமெனவும், இராஜபுத்ரன் என்னும் வடமொழிச் சிதைவெனவும் கூறுவர் [திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராண ஆராய்ச்சி பார்க்க] இத் திம்முராவுத்தர் திருப்பணிசெய்த காலம் சக-கசஅசு [கி பி. 1564]

[] இவ்வடையாளத்து ளடங்கியது பிரதியின்சிதைவைக் காட்டும்.

அனந்தாழ்வான் ஐயன்.

விரவுநந் தனவனஞ் சோலைநீ லத்தோடை
வீதிமா சித்தெருத்தேர்
மேவுதிரு நாடிருத் தேர்முட்டி மண்டபம்
விஞ்சுபொற் பலிபீடமுந்
துரவுநீர்த் துறையினிற் சந்தியா மண்டபஞ்
சூழ்சுற்று மதின்மண்டபந்
தூய்கால பூசைக்கு மூர்கள்பல் லக்கிவைகள்
சொக்கநா தர்க்குதவினான்
வரமிகுங் குரவையம் பாவையும் மேருமா
மலைகையும் பரவு மூரவோன்
வாழ்வுதவ றாதநற் சீரங்க னருள்வாழ
வந்தபா ரத்துவசனா
டரவினின் றாடபோ ரேற்றினாட னேவந்த
வந்தணர் குலாதிபதிபா
லாறுசூழ் தொண்டைநா டாளுமூர வோனனந்
தாழ்வா னியற்குரிசிலே. (சஅ)

விசுவநாதநாயக்கர்.

செஞ்சொல்புனை மதுரேசர் திருவால வாயிறைவர்
திருவுள மகிழ்ந்துபுனையச்
செம்பொற் பதக்கமுட னவா பரணமுஞ்
சேர்ந்தபரி கலமாதருங்
கஞ்சவயல் சூழுமொரம் மட்டிமா தலையின்மேற்
கயல்குதிகொ ளாதனூருங்
காக்கள்செறி யுந்திருக் கானையும் பூகவயல்
காட்டுமேலைப்பறம்பும்

---

சக. இவர் வீரசேகர சோழனால் அபகரிக்கப்பட்ட தென்னாட்டைச் சந்திர சேகரபாண்டியனுக்கு அளித்துவரும்படி, விஜயநகர ஸமஸ்தானாதிபதியால் அனுப்பப்பட்டு, அவ்வாறே ஷை பாண்டியனுக்களித்தும், பின் பாண்டியவமிசம் அற்றுப்போக, இவரே அந்த ஸம்ஸ்தானாதிபதியாக, தம் எஜமானரான விஜய

மஞ்சுதவழ் சோலைசூ ழிளமனல் லூரையும்
மருவுமிந் திரவிமானம்
வளமையொடு பழமைபுதி தாகவே பொன்பூசி
மகிமையுட னேயுதவினன்
விஞ்சிவரு திருவடி தனைப்பொருது திறைகொண்டு
மீனவனை வாழ்வித்தமால்
மேவுதென் கச்சிநா கயன்விசுவ நாதனுயர்
வெற்றிப்ர தாபமுகிலே. (௪௯)

அரியநயினமுதலி.

அருமா தவஞ்செ யறுபத்து மூவ ரவர்மண்டப
மருவாருஞ் சோலை யறச்சாலை மண்டபம் வன்னியடி
முருகேசன் சொக்கற்கு வெள்ளிச்சிங் காதன முற்றுஞ்செய்தான்
வருமா லரிய நயினு முதலி மதிமந்த்ரியே (௫0)

கிருஷ்ணவீரப்பநாயக்கர்.

முத்தமிழ்க் கூடற் பதிச்சொக்க நாதர்க்கு முத்தளக்குஞ்
சித்திரக் கோபுரஞ் செங்கற் படையைச் சிறக்கச்செய்தான்

---

நகர அரசரால் நியமிக்கப்பெற்றும் விளங்கியவர்; இக்காரணத்தால் மதுரை நாயகராஜவமிசத்துக்கு மூலபுருஷரானவர். இவர் ஆட்சிக்காலம் கி. பி. 1559–1563.

௫0. இவர், விஜயநகர அரசரால் விசுவநாதநாயகருக்குத் துணையாக அனுப்பப்பட்டு, பாண்டிநாட்டை ஜயித்து, தமது வீரத்தாலும் மதியூகத்தாலும் மகாராஜதந்திரி எனப் பெயர்பெற்றவர். மதுரைநாயக ராஜவமிசத்தை நிலைக்கச் செய்தவர். இவர், காஞ்சீபுரத்துக்கு அருகிலுள்ள "மெய்ப்பேடு" என்ற கிராமத்தில், ஓர் சைவவேளாளகுடும்பத்திற் பிறந்தவர் என்பர். இவர் ஷை விசுவநாத நாயகர்காலத்தும் அவர் குமாரர்காலத்தும் மந்திரியாய்விளங்கி அநேக அரிய காரியங்களைச் செய்தார். இவரைப்பற்றிய வேறு சரித்திரங்கள் தக்கநூல்களிற் கண்டுகொள்க. இவர், அரியநாயகமுதலி, நயினுத்தை எனவும் வழங்கப்பெறுவர். இவர் அறுபத்துமூவர் மண்டபத்திருப்பணி நடத்தியது சக–௧௪௯௧. [கி. பி. 1569.] இம்மண்டபம், முன்பு, சுவாமிசந்நிதி இரண்டாம்பிராகாரத் தென்புறவரிசையி லிருந்ததாம். இப்போது அது முதற்பிராகாரத் தென்புறத்துள்ளது.

மத்தகப் போர்விச்வ நாதன் குமாரன் மனுமுறைமைக்
கொத்துறப் பார்புரக் குங்கிருஷ்ண பூப குணக்கொண்டலே. (௫௧)

விதிக்கு முகுந்தற்கு மெட்டாத சொக்கர்க்கு மேதினியோர்
துதிக்குங் கொடிக்கம்ப மண்டப மொன்று துலங்கச்செய்தான்
கதிக்கும் பரமன்னர் பொன்னார் முடிகளைக் காலிலெற்றி
மிதிக்குங் கடாசலத் தான்கச்சி வாழ்க்ருஷ்ண வீரப்பனே. (௫௨)

ஐயர்சிங் காரச் செழுநீர்ப் புனல்வெள்ளி யம்பலமுஞ்
செய்ய வடக்குத் திருக்கோ புரமுஞ்செவ் வீச்சுரமுந்
துய்ய திருமடைப் பள்ளியு மன்புடன் றோன்றச்செய்தான்
தையலர் மோகன வேள்கிருஷ்ண வீர சபதுங்கனே. (௫௩)

வாரிப் புவிபுக ழாயிரக் கான்மணி மண்டபமு
மேருற்ற மூர்த்தியம் மன்மண் டபமு மிரண்டாம்பிரா
காரத் திருச்சுற்று மண்டப முங்கொடிக் கம்பத்துமுன்
வீரப்ப மண்டப முஞ்செய் தனன்கிருஷ்ண வீரப்பனே. (௫௪)

அல்லொத்த பூங்குழ லங்கயற் கண்ணம்மை யாலயத்துண்
மல்லப்ப னாட்டுபொற் கம்பம் பழகிய வாறுகண்டே
நல்லிட்ட மாகப்பொன் பூசுவித் தானண்ண லாருக்கொரு
வில்லிட்டுப் போரை விலக்கிட் டருள்கிருஷ்ண வீரப்பனே. (௫௫)

காளத்தியப்பமுதலி.

எண்ணிய வீரீச் சுரமுநற் காளத்தி யீச்சுரமும்
வண்மை யரிய நயினா முதலி வகுத்தமைத்தான்
அண்ண லரியீச் சுரம்வகுத் தானரி யான்புதல்வன்
புண்ணியத் தால்வந்த காளத்தி நாதன் புகழ்வள்ளலே. (௫௬)

---

௫௧. இவர், மேற்குறித்த விசுவநாதநாயகர்புத்திரராய், அவர்க்குப் பின் பட்டத்துக்கு வந்தவர். ஸ்ரீ குமார அல்லது பெரிய கிருஷ்ணப்பநாயுடுகாரு எனவும் வழங்கப்பெறுவர். இவர் ஆட்சிக்காலம் கி. பி. 1568—1573. இவர் இத்திருப்பணிகள் நடத்தியது சக-௧௪௯௫ [கி. பி. 1573.]

௫௫. மல்லப்பன் என்பவரால், சுவாமி சந்நிதி இரண்டாம் பிராகார மேல் புறம் ஐந்துநிலைக்கோபுரம் சக-௧௨௯௬-ல் செய்யப்பட்டது. (திருவாலவாயுடையார்கோயிற் றிருப்பணிவிவரம் எ-ல் ௨.)

௫௬. அரியான், முற்கூறிய அரியநயினாமுதலியாரின் பெயர்ச்சுருக்கம். இவர்குமாரர் காளத்தியப்பமுதலியாரென்பது அடுத்தபாட்டாலுந் தெளிவாதல் காண்க.

தென்னவ னின்றரு ளம்மைக்குப் பங்குனித் தேர்த்திருநாள்
சன்னிதி யேழ்நிலைக் கோபுரங் கற்படை தானமைத்தான்
மன்னு மரிய நயினு முதலி மகிழுமைந்தன்
இன்னருட் காளத்தி நாதன்றென் பாகைக் கிறையவனே. (நஎ)

நயினுமுதலி.

கொற்றவ ராகி முடிசூடுஞ் சொக்கர்பொற் கோயிலுள்வாழ்
கற்றவர் போற்றுந் துர்க்காதேவி மண்டபங் கட்டினன்கா
ருற்றிடு தண்டலை சூழ்கூடல் வாழ்கூட லூருடையான்
நற்றவ மென்ன வரும்பாட்டி யானயி னுமகிழ்ந்தே. (நஅ)

வீரகிருஷ்ணப்பநாயக்கர்.

வீரீச் சுரங்கிட்டி னீச்சுரஞ் சோதி விளங்குமையங்
காரீச் சுரங்கயற் கண்ணிரண் டாம்பிரா காரத்தினிற்
சீரார் வடபுற மேல்புற மண்டபஞ் செய்தமைத்தான்
நாராரு மன்மத வேள்வீர கிருஷ்ணப்ப நாயக்கனே. (நகூ)

வீரராகவன்.

திருவளர் கூடலின் முத்தளக் குந்திருக் கோபுரஞ்சீ
ருருவளர் வன்னக் கலாபமு நாயகர்க் கோங்குசெம்பொற்
குருவளர் மண்டப முன்னுளி னுள்ள சுறையுஞ்செய்தான்
தருவளர் மாவைப் பதிவீர ராகவ சற்குணனே. (சூ0)

---

நஎ. சந்நிதியேழ்நிலைக்கோபுரத் திருப்பணியை இவர் நடத்திய காலம் சக-கசகூ [கி. பி. 1570]. தென்பாகை என்பது பாகை, வக்கபாகை திருவக்கரையென வழங்கும் ஸ்தலம்போலும்.

நஅ. துர்க்காதேவிமண்டபம் சுவாமிசந்நிதி முதற்பிராகாரத்து வடபுறத்துள்ளது.

நகூ. இவர் முன்புகூறிய கிருஷ்ணவீரப்ப நாயகர்போலும். இவர் திருப்பணி நடத்தியகாலம் சக-கசகூக. [கி. பி. 1569].

சூ0. மாவைப்பதி-திருவாமாத்தூர் என்னும் சிவஸ்தலம்.

## செவ்வந்தி.

சுரிகுழ லங்கயற் கண்ணிபொற் கோயிலைச் சூழ்ந்ததெற்குத்
திருமதி லுக்கரு கேயொரு மண்டபஞ் செய்ததிலே
யுரிமையி னலருட் செவ்வந்தி யீசரை யுண்டாக்கினன்
திருவளர் கல்லூர்ச் சனிப்பெரு மாடந்த செவ்வந்தியே. (சுக)

## கடந்தைமுதலி.

நற்று ரணிபுக ழங்கயற் கண்சன் னதிவிளங்கப்
பொற்று மரைக்கு வடகீழ்ப் புறத்தினிற் போற்றியன்பாய்க்
கற்றார்க ளெண்ண வொருதிரு மண்டபங் கட்டுவித்தான்
வற்றாத சீர்த்திக் கடந்தை முதலி மகீபதியே. (சுஉ)

## நாதசெட்டி.

வேரியங் கொன்றை மதுரா புரிச்சொக்கர் வீற்றிருக்குஞ்
சீரிய கோயி லிரண்டாம்பிரா காரத் திருச்சுற்றெல்லாம்
பாரிலுள் ளோரும் புகழத் தளவிசை பண்ணுவித்தான்
நாரியர் வேள்கச்சிப் போத்தய னாக நராதிபனே. (சுங)

---

சுக. இச்செவ்வந்தீச்சுரம் இப்போதும் அப்பெயரானேயுள்ளது. இப்பிரதிஷ்டை நடந்தேறியகாலம் சக-கசஅசு [கி. பி 1564]. இத்திருப்பணி நடாத்திய செவ்வந்தியென்பார், மதுரைத் திருவிளையாடற் கதைகளை விரித்துக் கூறுவதும் இச்சங்கத்தே முதன் முதற் கண்டதுமான சுந்தரபாண்டியம் என்னும் நூலியற்றிய அநதாரி என்னும் புலவர் பெருமானல் அந்நூலில் ஆங்காங்கே புகழப்பட்ட, கல்லூரதிபனன மன்றைத் திருவிருந்தானென்பாற்குச் சகோதரர். இச்செவ்வந்தி, முன்சொன்ன நாயகவரசரான கிருஷ்ணவீரப்பரால் (கி. பி. 1563—1573) பெரிதும் அபிமானிக்கப்பெற்றவர். இவற்றை ஷெ. சுந்தரபாண்டியம், நகரச்சருக்கம், சசு-ம் பாடலில்வரும் "அன்னவ னரசர் சூழுங் கச்சிவீரப்பனென்னு, மன்னவ னருள்சேர் மன்றைச் செவ்வந்தி துணைவன் வாய்மைத், தென்னவன் திருவிருந்தான்" என்பதனல் அறிக. இவர்களூர் கல்லூரென்பது, 'கல்லூரதிபனுந்திருவிருந்தவன்' என்னும் அந்நூற்பாயிரவடியாலும், இப்பாட்டினீற்றடியாலும் விளங்கும்.

சுஉ. இவர் திருப்பணி நடத்தியது சக-கருகரு [கி. பி. 1613]. இவர் கட்டிய மண்டபம் "முதலிப்பிள்ளை மண்டபம்" என்று வழங்கும். (திருவாலவாயுடையார்கோயிற் திருப்பணிவிவரம்-ருரு).

## பெத்தப்பசெட்டி.

தருந்தமிழ்ச் சொக்கர்க் கிரண்டாம்பிரா காரத் தளவிசையும்
விரும்பி யணிந்திடப் பொற்றிரு வாசியு மேன்மையொடு
திருந்திய நேசத் துடனளித் தான்செக மேழுமெச்சும்
பெரும்புகழ் நாகயன் பெற்றருள் மாப்பிள்ளைப் பெத்தப்பனே. (சுச)

## பாப்புசெட்டி.

உறுபத்தி யாற்றிருக் கொட்டாரந் தேரொன் றுமைக்குச்செய்தான்
மறுவற்ற சீர்ப்புக ழான்பாப்பு செட்டி மதுரைதனில்
அறுபத்து மூவரொ டைம்பத் தொருலிங்க மாங்கமைத்தான்
மறுவற்ற சிந்தையி னன்பாண பத்திர மாதவனே. (சுரு)

## பாப்பெல்லப்பசெட்டி.

தாரார் குழலங் கயற்கண்ணி கோயிற் றளவிசையுஞ்
சீராருஞ் செம்பொற் பதக்கமுஞ் சொக்கர்க்குச் செய்தளித்தான்
காரார் பொழில்புடை சூழ்கச்சிக் குப்பணன் காதன்மைந்தன்
போரார் படைச்செங் கரதலன் பாப்பெல்ல பூபதியே. (சுசு)

## சின்னச் செவ்வந்தி.

கொத்துப் பவளஞ்செம் பொற்பட்டம் வெள்ளிக் குடஞ்சிறந்த
முத்துத் தொடைவெள்ளி யாற்சிங்க வாகன முத்தமிழ்தே
ரத்திருப் பூவணற் றங்கரை மண்டப மன்பிற்செய்தான்
தித்தித்த வாசகன் கல்லூர் வருசின்னச் செவ்வந்தியே. (சுஎ)

---

கடு. ஐம்பத்தொருலிங்கம்-சுவாமிகோயில் முதற்பிராகாரத்து வடபுறத்தே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

சுஎ. திருப்பூவண ஆற்றங்கரைமண்டபம் என்பது, பொன்னனையாளுக்காக இரசவாதஞ்செய்த திருவிளையாடலின்பொருட்டு, ஸ்ரீ சுந்தரேசுவரர் மதுரைக்குக் கிழக்கேயுள்ள திருப்பூவண மென்னும் ஸ்தலத்துக்குப் புறப்பாடாகி எழுந்தருளியிருக்கும் மண்டபம் இஃது, அந்த ஸ்தலக்கோயிலுக்கு ஈசான்ய திசையில் வையையின் தென்கரையில் உள்ளது.

திண்டிறற் றிம்மப்ப நாயக்கன் முன்பு செயுங்கண்டர
கண்டன் குறட்டுடன் செவ்வந்தி மண்டபங் கட்டுவித்தே
யெண்டரு மாடித் திருத்தேருண் டாக்கின னெண்டிசைசூழ்
தெண்டிரைப் பார்புகழ் கல்லூர் வருசின்னச் செவ்வந்தியே. (சுஅ)

நற்றமிழ்ச் செவ்வந்தி யீசருக் கேசன் னதிமண்டபஞ்
சுற்றுத் திருமதில் சோபான முஞ்செய்து சுப்ரமண்யக்
கொற்றவர்க் குக்கிளைக் கோட்டைமுன் னுகவொர் கோயில்செய்தான்
மற்புய வேள்சின்னச் செவ்வந்தி நாத வரோதயனே. (சுகூ)

சின்னியான்.

விடைக்கலங் காரர் மதுரே சருக்குவெண் டும்பைவில்வத்
தொடைக்கன கத்தி லமைத்தவர் கோயிலுட் டேயபாக்க
லிடைக்கட்டு வாயில் வெளிதெரி யாம லினிதமைத்தான்
அடைக்கலங் காத்தா னருள்சின்னி யான்வைத்த வன்புநன்றே. (எ0)

விருப்பணன்.

ஆசறு சொக்கர்க் கபிடேக பூசையுண் டாக்கித்தென்பால்
தேசுறு மேற்றிக்கு மூலையி லேதிரு நாண்மண்டப
மாசற வங்கயற் கண்ணம்மைக் காக வகுத்தனன்றுன்
வீசு பெருங்கொடைக் கம்பல ராய விருப்பணனே. (எக)

---

சுஅ. திம்மப்ப நாயக்கரென்பவர், விஜயநகர அரசரது பிரதிநிதியாய் கி. பி. 1519—1524-வரை மதுரையை ஆட்சிபுரிந்த குருகுரு-திம்மப்ப நாயக்கராவர். கல்லூர்ச் சின்னச்செவ்வந்தி யென்பவர் முற்கூறிய கல்லூர்ச் செவ்வந்தியின் துணைவரான திருவிருந்தான்போலும். திருவிருந்தான் கன்னடப்படையை வென்று சிறந்தவரென்றும், இவரதூரான மன்றைப்பதி ஸ்ரீரங்கத்துக்கு வடக்கணுள்ளதென்றும் சுந்தரபாண்டியநூல் கூறுகிறது. ''கண்டரகண்டன் குறடு'' என்பது இப்போதுள்ள செவ்வந்தீச்சுரர்சந்நிதிக்குத் தெற்குப்பக்கத்துள்ள பெரிய மேடைபோலும்.

எக. இத்திருநாண்மண்டபம், ''சுவாமிகோயில் இரண்டாம் பிராகார நிருதிமூலைமண்டபம்'' என விவரங் காணப்படுகிறது. இத்திருப்பணி நடந்த காலம் சக-கருகO. [கி. பி. 1588] (திருவாலவாயுடையார்கோயிற் திருப்பணி விவரம்-ருக).

நயினுத்தைமுதலி.

சீரேற்ற சொக்கர்க் கபிடேகக் கட்டளை செய்துசெம்பொன்
வாரேற்ற பூண்முலை யங்கயற் கண்ணிக்கு மாசித்திருத்
தேரேற்ற மண்டபஞ் செய்தனன் தம்பிச்ச தீரனசெல்வன்
தாரேற்ற திண்புய வேணயி னுத்தை சயதுங்கனே. (எஉ)

வையங்காப்பவன்.

மைப்படி யுங்குழ லம்மைக்குப் பொற்றிரு வாசிசொக்கர்க்
கிப்புவி யெண்ணும்வெள் ளிப்பூத வாகன மோர்பெற்றதோர்
செப்பரும் பொன்வில்வ மாலைபெத் தீச்சுரஞ் செய்தளித்தான்
கைப்புயன் மாப்பிள்ளைப் பெத்தன் றரும்வையங் காப்பவனே. (எரு)

சிராமலை வேலப்ப சின்னச்செவ்வந்தி.

குராவணி யாறு முகப்பெரு மாளுக்குக் கோயிலுநல்
லராவணி வேணியர் வேலீச் சுரமுந்த னன்பிற்செய்தான்
தராதல கற்பக தாருவென் றேத்தத் தருங்கொடையான்
சிராமலை வேலப்ப செட்டியென் னுஞ்சின்னச் செவ்வந்தியே. (எச)

முத்துவீரப்பநாயக்கர்.

தண்டரள நகையெங்க ளங்கயற் கண்ணம்மை
தனதுபா கத்தில்வாழுந்
தக்கமது ராபுரிச் சொக்கநா யகர்திருச்
சந்நிதி விளங்கியிடவே
கொண்டல்படி மகமேரு வரைதனைக் குத்திக்
குடைந்துவெளி யாக்கிமற்றக்
குலகிரிக ளைத்தூண்க ளாகவே வெளியிற்
குறித்திடை நிறுத்தியதென

எஉ. பெரிய தேரடிமண்டபம் கீழைமாசிவீதியிலுள்ளது.

எரு. இப்பாட்டில் வரும் "பெத்தீச்சுர"மும், அடுத்த பாட்டில் வரும் 'வேலீச்சுர'மும் இப்போது அப்பெயர்களுடன் வழங்கவில்லையாயினும், சுவாமி கோயில் இரண்டாம்பிராகார மேற்றிசையிலே உள்ள, சிவலிங்கப்பிரதிஷ்டைகள் அமைந்த சிறுகோயில்களைச் சேர்ந்தவைகளாகக் கருதப்படுகின்றன.

மண்டலந் தனிலுள்ள மண்டபக் குலதிப
மண்டபங் கட்குநாயன்
மண்டப சிரோரத்ந மானவீ ரவசந்த
மண்டபங் கட்டுவித்தான்
வெண்டாள மணிவிசுவ நாதகிருஷ் ணயவீரன்
மெச்சும்விசு வப்பனன்பான்
மேவுமுத் துக்கிருஷ்ண மகிபால னருள்முத்து
வீரப்ப பூபாலனே. (எரு)

தஞ்ச மழகிரிநாயக்கர்.

விடையுற்ற சொக்கர்தம் மூட்பிரா காரத்து மேற்புறமும்
வடதிக்கு மொக்கத் தளவிசை கோபுர வாயிலுக்கோர்
படிமிக்க வெண்கலத் தாலமைத் தானெல்லன் பாலனென்னர்
உடன்முற்று வீரப்ப னூழியன் குஞ்ச மழகிரியே. (எசு)

ஞாநப்பிரகாசபண்டாரம்.

[அண்டர்பணி சொக்கர்க்கு மங்கயற் கண்ணிக்கு மபிடேகநைவேத்ய வகைமாத பூசை, மண்டபங்கள் திருத்தேர்....வாகனங்கள்....வளமருவு பூஞ்சோலை யநேக மினிதமைத்தான், எண்டிசை யெண் குநாய....னிடை மருதூருணந்திதேவனடிபரவுந், தண்டமிழ்தே ரபிஷேக ஞானப்பிரகாசன் சைவசித்தாந்தந் தெளிந்த சைவசிகாமணியே.] (எஎ)

சதுரா னனன்புகழ் சொக்கர்க்குக் கோபுரந் தண்டலைகள்
விதுவார் மதின்மண் டபக்துறை யாவும் விளங்கச்செய்தான்

எரு. மூத்துவீரப்பநாயக்கரென்பவர், மதுரையை ஆட்சிபுரிந்த ஸ்ரீ முத்து கிருஷ்ணப்ப நாயகொருவின் புதல்வராய்ச் சிமமாஸனமேறியவர்; இவர் ஆட்சி புரிந்தகாலம் கி. பி. 1609முதல் 1623வரை என்பர். இவ்வரசர்க்குப்பின்பே, இவ ரிளைய சகோதரரும், மகாகீர்த்திமானுமாகிய ஸ்ரீ திருமலைநாயக்க ராட்சிபுரிந்தது. இம்மூத்துவீரப்பர், தஞ்சையரசன், மைசூர்அரசன், மகமதியர் இவர்களை ஜயங் கொண்டவரென்றும், இவர்காலத்தில், Fransis Xavier, Father Fernandey, Robertde Nobilibus முதலியவர்கள் இத்தென்னாட்டில் விளங்கினரென்றும் சரித்திரங் கூறுகின்றது. இனி, இவர்கட்டிய 'வீரவசந்தராயர் மண்டபம்' என்பது, சுவாமி சந்நிதிக்குப் போம்வழியில் ஆயிரக்கான்மண்டபத்துக் கீழ்ச் சார்பாகக் கிழமேலோடிய பெரிய மண்டபம். இத்திருப்பணியை இவ்வரசர் நடத்திய காலம் சக-கருநரு. [கி. பி. 1611.]

புதுவாச வண்டண்ட தாருவின் வாழப் பொழில்வளரும்
மதுரா புரிவரு ஞானப்ர காச வரோதயனே. (எஅ)

[ஆதியர் மதுரேச ராலயத் தென்புறத் தறுபத்துமூவர் கோயி,
லாதியறை கட்டியவர் கோயிலிற் பலகணியு மழகாக வேயமைத்து—நீதி
யபிடேகரை வேத்யமெள் ளோதன நீள்பிச்சை யுண்டையமுது, நித்
தமு நடக்கவு மிரண்டாம்பிரகாரத்தி னிருதிதிசை யின்மண்டபஞ்—
சோதிவலை வீசுபொன மேவுமண் டபமுமது சூழ்ந்ததென் னஞ்சோலை
யும், துய்ய நவ வையக்கரைத் தோப்புபொற் றுமரைசூழ்நதகீ ழப்படியுமை-
பாதியாருக்சொக்கர்க்கு........கம் பண்டாரம் செய்விக்கவே பரிவுட னீந்த
னன் களந்தை யம்பதி மேவுதார்....] (எகூ)

திருமலைநாயக்கர்.

தரணிபுகழ் மேருகிரி பலவுரு வெடுத்துநற்
சந்நிதா னத்தில்வந்து
தவமுற்ற தென்னநூற் றிருபத்து நாலுகா
றணிலை யெந்தநாளும்
திரமான புதுமையா மண்டபங் கட்டியே
சித்திரமு மெழுதியந்தச்
செய்யமண் டபமணியு மாலையென விருபாற்
சிறந்தமண் டபமியற்றிக்
குரவார் கருங்குழ லங்கயற் கண்ணம்மை
கொன்றையணி சொக்கேசனூர்
கூடிவிளை யாடியும் வசந்தமெனும் நல்விழாக்
கொண்டருள வேசெய்தனன்

---

எகூ. அறுபத்துமூவர்கோயில், முன்பு சுவாமிசந்நிதி இரண்டாம் பிராகா
ரத் தென்புறத்திலிருந்ததென்றும், பிற்காலத்தில், அச்சந்நிதி முதற்பிராகாரத்
தென்புறத்தில் பிரதிஷ்டைபண்ணப்பட்டதென்றுந் தெரிகிறது.

அ0. இத்திருமலைநாயக்கர், ஸ்ரீமுத்துகிருஷ்ணநாயகொருவின் இளைய
புதல்வராய்த் தெனனாட்டை மிக்க கீர்த்தியுடன் ஆட்சிபுரிந்தவரென்பது பிரசித்
தம். இவர் ஆட்சிககாலம் கி. பி. 1623 முதல் 1659-வரை என்பர். திருமலை
நாயக்கருடைய அருமை பெருமைகள் மிகப்பலவாதலால், அவற்றைச் சரித்திர
நூல்களிற் கண்டுகொள்க. இத்திருமலைநாயக்கர் கோயில் பூஜைச்செலவுக்கு
மட்டும் வருஷம் க-ககு ரூபா. 36,000-மும், கோயிற் பிரசாதசெலவின்பொ
ருட்டு வருஷமொன்றுககு ரூபா. 88,000 வருவாயுள்ள கிராமங்களும் கொடுத்

பாராச சேகரன் பாராச பூஷணன்
பாராச ராசதிலகன்
பாராசர் பணிமுத்து கிருஷ்ணப்ப பூபனருள்
பாலதிருமலைபூபனே. (அ0)

மகரமெறி கடல்ராம வாளியால் முனிகையான்
மாறனார் நாட்சிலம்பால்,
மாதவ னெடுத்தவவ தாரமீ னத்தினால்
வருசுப்ர மணியன்வேலால்
தகர்பட்டு வெந்துபய மாய்ப்பின்ன மாகியிரு
தாழ்வாகி யுடலம்வற்றித்
தரைபட்டு மொருகால நிறைவுற்று மிப்படித்
தளர்ந்துவடை பட்டவதனாற்
புகலரிய சத்தசா கரமுமத னடுவிலே
புவனநவ கண்டங்களும்
பொன்மேரு நிகர்மேவு மண்டபமு மதுரேசர்
புகழுநவ மாய்ப்புதுக்கித்
திகழ்செய்திரு மலைநாய கர்சமுத் திரமெனும்
தெப்பக் குளங்கண்டனன்
சிகரபுய பலவிசய சுமுகமுத் துக்கிருஷ்ண
திருமலை மகீபாலனே. (அக)

---

துதவினரென்றும், இக்கிராமங்கள் மொத்தத்தில் 150-என்றும் சரித்திரங்கூறுகின்றது. இவர் கட்டியதாக இப்பாட்டிற்கூறப்படும் புதுமண்டபம், உத்தேசம் 300-அடி நீளமும் 80-அடி அகலமுமுள்ள அழகிய கருங்கற்கட்டடம். இம்மண்டபத்தில் வசந்தோற்சவம் மிக விமரிசையாக நடைபெறும். இம்மண்டபவேலை, கி. பி. 1626-ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று, 1645-ம்வருஷம் முடிவுற்றதென்று தெரியவருகிறது. இம்மண்டபத்தின் மத்தியில், திருமலைநாயடுகாரு, தம்முடைய பட்டமகிஷிகள் அறுவருடன் விளங்கும் பாவனையாகச் சிலாவுருவங்கள் மிக அழகாக அமைக்கப்பெற்றுள்ளன. மற்றுமுள்ள தூண்களில், இவர்க்கு முன் ஆண்ட ஒன்பது நாயக்கவரசர் உருவங்களும் வைக்கப்பெற்றிருக்கின்றன. இவற்றைச்செதுக்கிய சிற்பி, சுமந்திரமூர்த்தி ஆசாரி என்பர்.

அக. மதுரைமாநகரின் கீழைக்கோடியில் அமைந்து மிகஅழகாகவிளங்கும் இத்தெப்பக்குளம், பக்கமொன்றுக்கு 300-கஜமாக, நான்குபக்கங்களிலும் 1200 கஜம் சுற்றளவுள்ள சதுரவடிவானது. இது, சிற்பாலங்காரத்துடனும் சுந்தரமாகவும் பலமானகற்களால் கட்டப்பட்டிருப்பதோடு, இக்குளத்தின் மத்தியில், ஒருசிறிய தீவெழும்படி, அழகிய கருங்கற்கட்டடக்கோயிலும் அதைச்சுற்றிக் கண்ணைக்கவரத்தக்க உத்தியானவனமும் அமைக்கப்பட்டுள்ளன. தைப்பூசந்தோறும், இக்குளத்தில் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர்களது தெப்போத்ஸவம் மிக விமரிசையுடன் நடைபெற்றுவருகின்றது.

உாக்கவெகு ரொக்கங் கொடுத்துப் படிக்குஞ
ஞுத்திர முதற்பழங்கல்
லொடிந்தன பிடுங்கிநவ மாயமைத் துக்காரை
யோடுசீ ரணமகற்றி
யரைத்தசுண் ணும்பைவெல் லச்சாறு விட்டுநன்
ருய்க்குழைத் துச்செங்கலும்
அடுக்காப் பாப்பிச் கடுக்காயொ டாமலக
மரியதான் றிக்காயுமூங்
தொருக்கா விருக்கா விடித்துநன் னீரினி
லூறிய கடுஞ்சாறும்விட்
டூழிகா லங்களினு மசையாத வச்சிரக்
காரையிட் டோங்குமம்மை
சிரக்காலம் வாழவே மீனாட்சி கோயிலுஞ்
செப்பமிடு வித்துநன்ருய்ச்
செய்வித்த புண்ணியஞ் சதகோடி புண்ணியக்
திருமலை மகீபனுக்கே. (அஉ)

முனைவேல் விழியங் கயற்கண்ணி சந்நிதி முன்மடத்து
ளனைவோர்க்கு மன்னபூந் தோழியம் மாட னறைக்குமறு
தினமே தினியில் நடக்கும் படிக்கீந் திசையுங்கொண்டான்
புனவேலி தந்தனன் கச்சித் திருமலை பூபதியே. (அங)

சங்கர ரெங்கள் மதுரா புரிச்சொக்கர் சந்நிதியிற்
பொங்கு கொடிக்கம்ப மாபலி பீடம்பொன் பூசுவித்தான்
செங்கம லத்திரு வாழ் முத்து க்ருஷ்ணப்பன் செல்வனெங்கும்
பொங்கி வளர்ந்த புகழான் திருமலை பூபதியே. (அச)

நன்னுத லங்கயற் கண்ணி தனக்கு நலம்பெறவே
யுன்னத மாகுங் கொடிக்கம்ப மாபலி பீடமுடன்
சொன்ன மளித்துப்பொன் பூசுவித் தான்சுக போகனெங்கள்
மன்னன் திருமலை பூபன் மதுரை வரோதயனே. (அரு)

---

அஉ. அம்மன்சந்நிதி அஷ்டலக்ஷ்மி முன்மண்டபவளைவு இவ்வாறு பல முடையதென்பர்.

அங. அம்மன்சந்நிதிக்கு வடபக்கத்தும் தென்பக்கத்தும் ஒருமண்டபம் இருந்ததென்றும் முன் இங்கு அன்னதானமும் நடந்ததென்றுஞ் சொல்வர். இம்மண்டபம் எடுபட்டு அவ்விடத்தில் பூச்செடிகள் வைக்கப்பட்டுள்ளன.

பின்னிய செஞ்சடைச் சொக்கர்தம் மாறுகாற் பீடத்தினு
மின்னெழி லம்மைத னாறுகாற் பீட மிசையினுந்தான்
இன்னருள் பெற்றரு ளுந்துவார பாலரை யேயமைத்தான்
பொன்னணி தாரார் புயத்தான் றிருமலை பூபதியே. (அசு)

முத்தழகாத்திரி நாயக்கர்.

கங்கையும் சேதுவும் புகழ்மதுரை வைகையின்
கரைதிரும லேந்த்ரபுரதக்
கனமான புதுவீதி யணுகவோ ராலயங்
கனகவரை போற்சிகரமும்
புங்கமுட னேசெய்து லிங்கமன் பெயர்பெறப்
புந்திமகிழ் வுடன்முடித்துப்
போர்முகத் தந்தியுங் கந்தவே டன்னையும்
புகலுமெழில் விசுவநாதர்
பங்கில்வள ரும்விசா லாட்சிநந் தீசுரர்
பண்புசெறி சண்டேச்சுரர்
பரிவினுட னிவையெலாம் பிரதிட்டை செய்துமன்
பாகவபி டேகபூசை
அங்காங்க மாய்நடந் திடவில்லி யூர்க்கு
லாஞ்சேரி யுங்கொடுத்தான்
அருண்முத்து வீரப்பன் வரபுத்ர னென்னுமுத்
தழகாத்ரி மகிபாலனே. (அஎ)

கந்தப்பொடி பெத்துசெட்டி.

மதுரேசர் கோயி லிரண்டாம்ப்ர காரத்தில் மன்னுமலை
யதுதான் மிகப்பழத் தாலெவ்வண வாண்ட விநாயகனைப்
புதிதாப் பிரதிட்டை செய்தானம் மூர்த்தி புதல்வனமிக்க
சதுரான கந்தப் பொடிபெத்து செட்டி தபாபானே. (அஅ)

---

அசு. இந்தத் துவாரபாலகாது பெரிய திருவுருவங்கள் தாமிரத்தால் அமைக்கப்பட்டவைகளாம்.

அஅ. ஆண்டவிநாயகர்-முக்குறுணியரிசிப் பிள்ளையார்.

### மோல்லாச்சேட்டி.

தட்டுப் புழுகணை சொக்கர்க்குப் பூவணூற் றங்கரைக்கே
யெட்டுத் திசையும் புகழச்செவ் வந்தி யியல்புடனே
கட்டின மண்டப முன்பினும் பின்புதி தாய்க்கட்டினன்
கெட்டிமொல் லாச்செட்டி தன்கிளை தானுங் கிளைத்திடவே. (அகூ)

### பிட்டுச்சோக்குப்பண்டாரம்.

புகலரிய சொக்கர்க்கு மெங்குமிக் கானகோ
புரங்கணா யகத்தும்வீர
பூபன்மண் டபத்துக்கு மாடிவீ திக்குமழை
பொழியுமிடம் வைத்தசிலைமேல்
மகமேரு விருபத்தி ரண்டுதூ ணசைபாத
வகைநிறுத் திப்போதிகை
வைத்தவுத் திரபக்க மாடாங் குஞ்சிங்க
நடுவருப டங்குபாக்கல்
மிகவுமுன் னதமெனத் தெய்வங்க ணாயக
மேவுசந் நிதிநாயகம்
விளங்குநா யகமண்ட பங்கணா யகமிது
வெனக்கட்டி னன்மண்டபம்
இகபரமிர ண்டுக்கு முண்டெனக் கினிமேற்செய்
திடுவதவர் கடனென்னவே
ஏவண முராரிநிகர் பூவண மகாமுனிவ
னீண்டபிட் டுச்சொக்கனே. (கூ0)

### சோக்கப்பசேட்டி.

இந்நிலம் புகழ்மதுரை மாசிவீ தித்தெருவி
லினியதென் பாரிசத்தி
லிரசதச் சபையெனச் சிலையினன் மண்டபமு
மினியநற் சோபானமுங்

---

அகூ. இம்மண்டபம் செவ்வந்திகட்டினதென்பது, இந்நூலின் எஎ-ம் பாடலிற் காண்க

கூ0. இம்மண்டபம், திருக்கல்யாண மண்டபத்திற்கு வடபால் அல்லது தென்பாலுள்ள மண்டபங்களில் ஒன்றுதல் வேண்டும். திருப்பணி விவரத்தில், பேச்சக்கால் மண்டபம் பிட்டுச்சொக்குப்பண்டாரம் செய்தது என்றும் இத் திருப்பணி சக. கடுஅ0 (கி. பி. 1658) ல் நடந்ததென்றுங் காணப்படுகின்றது.

கன்னரு றுடன்வாழை யிளநீர் நறும்பழக்
 காய்கட்டி மேற்கட்டிதூக்
கனகட்டு வர்க்கமல ரால்நிறைத் துத்தாரு
 காவனமி தென்னவதனு
ளன்னநடை மீனாட்சி மதுரேச ரும்மெழுந்
 தருளியபி டேகநைவேத்
யஞ்செயவு மானசம யங்கட்கும் வெகுவரிசை
 யன்பினொடு செய்வித்தனன்
சொன்னமொழி தவறாத பெத்தயன் பெற்றவுத்
 துங்கன்முத் தையபூபதி
துணைவனென வந்தருளு மனைவர்க்கு முபகாரி
 சொக்கப்ப மகிபாலனே. (கூக)

மங்காமை அழகாத்திரி நாயக்கர்.

மைத்திகழ் கண்ணியங் காளம்மை கோட்டையின் வாயிலுக்கு
முத்தரம் வைகையின் தென்பாற் படித்துறை யோர்மண்டப
மித்தல மெண்சொக்க ராவணி மூலத் தெழுந்தருளப்
புத்தியிற் செய்தான்மங் காமை யழகாத்ரி பூபதியே. (கூஉ)

செவ்வந்தி யாண்டிசெட்டி.

வேண்டவரங்கள் தருமேழ் கடற்கு மிகவுந்தென்பால்
ஆண்டகை சொக்கர் திருநா டொறும்வர வாகவன்பு
பூண்டொரு மண்டபஞ் சுற்றக்கா ரம் புகழ்ச்செய்தான்
தாண்டவன் றந்தருள் செவ்வந்தி யாண்டி தபாநிதியே. (கூங)

சொக்கஞ்செட்டி.

கண்டொத்த செஞ்சொன் மயிலங் கயற்கட் கவுரிபங்கர்
விண்டலர் கொன்றைச் சடைச்சொக் கருக்கு விறகுகட்டு
மண்டபங் கட்டுவித் தான்சொக்கஞ் செட்டி வாத்தில்வந்த
தண்டா ளப்புயத் தான்சொக்கஞ் செட்டி சயதுங்கனே. (கூச)

---

கூஉ. அங்காளம்மை—(புதுத்தெருவிற்குப பின்புறத்துக் கோயிலிலுள்ள) செல்லியம்மை.

### விஜயரங்க சொக்கநாத நாயக்கர்.

[தென்னவன் மகிழுங் கயற்கண்ணிகோயிற் றிருப்பள்ளி யறையின் முன்பு—சிங்காரவறைகட்டியபிடேகமாதிச் சிறப்புகள் விழா பூசையும், எங்நாளடக்கவில் லாபுரகு...யிலெழின் மண்டப—மிதமாகவேகட்டி மது ரேச ரம்மையுட னினிதா யெழுந்தருளியே, வன்னவபிடேகவகை பாவா டை வரிசையும் வளமையொடு கொண்டருளவே—வாகான செங்நெல்வகை வில்லா புரத்தையு மாதர்முத்தம்மைபேரால், நன்னயத் தொடுதலத் தார்கள் பாரிசமாக நண்பினுடனேயுதவினுன்—ரங்ககிர்ட் டிண முத்து வீர னருள் விசயரங் கச்சொக்க நாதேந்த்ரனே.] (சுடு)

### அச்சயராயன்.

மிகவு மபிடேகஙை வேத்திபக் கட்டனை
மீனாட்சி சொக்கருக்கு
மிக்கதங் தச்சிவிகை சாமரமு மொருநான்கு
மெச்சுமுச் சிதவிசிறிகள்
பகருமெழி லங்கயற் கண்ணிக்கு மூக்குத்தி
பாதத்தி லங்கிதண்டை
பாடகங் தங்கத்தி லட்டசர மதுவலாற்
பன்னெட்டெ னுஞ்சதங்கை
செகமெலாம் விலைகொண்ட ரத்னகண் டாவளி
சிங்தைமகிழ் வாயளித்துஞ்
செங்கோல் நடாத்திவரு கர்த்தாக்கண் மகிழவே
தேவிசங் நிதிவிளங்க
மகமேரு வைக்குடைங் தாலென்ன வவர்காண
மண்டபஞ் செய்தமைத்தான்
வையகம் புகழ்நார ணையன்மெய்த் துணையாக
வந்தவச் சயராயனே. (சுசு)

---

சுசு. அம்மன் சந்நிதிக்குக் கிழக்கேயுள்ளது 'அச்சயமண்டபம்'; இஃது இப்போது "நகராமண்டபம்" எனப்படுகிறது. அச்சயராயர் என்பவர், கி. பி. 1635 முதல் 18 வருஷம் மதுரை மண்டலத்தைத் தம்பேர்பொருட் டாட்சி புரிந்த மங்கம்மையாரிடம் மந்திரியாயிருந்த ஒருபிராமணர்.

### சமுகம் மீனாக்ஷி நாயக்கர்.

கூடலம் பதியில்வளர் மீனாக்ஷி சந்நிதிக்
 கோபுரக் கொடுங்கைமட்டுங்
கோகனக மன்னவே மண்டபங் கட்டினன்
 குறைவின்ம காதோரண
மாடலம்பிகை முன்னமிருபாரிசத்து முக்
 கைந்துமே னடுநாசியு
மாகவே பதினொன்ற துண்டமுறு தீபமு
 மறுநூறு பதின்மூன்றுடன்
கூடவொரு வெண்கல நூற்றுமுப் பத்தாறு
 துலாமெனும் படிதனக்குச்
சொல்லும்பொனு னூறுகூலியிரு நூறுன
 தொகையும்விலை யாயிரம்பொன்
நாடெலாம் விளங்கவே தீபசந்த் ரோதய
 நல்கியே நிலைநாட்டினன்
நன்மைதரு திருவேங்க டன்பெற்ற மீனாட்சி
 நளினலட் சுமிகாந்தனே. (௧௭)

### அருணாசலமுதலி.

எண்ணிய சகாத்தமோ * ராயிரத் தறுநூற்றெ
 டெண்பதுட னொருபதின்மே
லேற்றம் பெறுஞ்சர்வ தாரிவரு டத்தினி
 லியன்மகர மாதந்தனில்
நண்ணிவரு மொன்பதாந் தேதியே காதசியி
 னயமான புதவாரமு
நாடிமிகு ரோகணிதி ருதிநாம யோகமுட
 னற்பத்ர வாகரணமுந்
திண்ணமுட னற்றின மெனமனத் தெண்ணியே
 திருவாப்ப னூரில்வைகுஞ்
சிவன்றனக் காலயந் தேவிபரி வாரமுதல்
 செய்துபிர திட்டைசெய்தான்

---

௧௭. இவர் மண்டபங்கட்டின காலம் சக. ௧௬௩௦ [கி. பி. 1708] என்று காலவிவரங் காணப்படுகிறது. [திருவாலவாயுடையார் கோயிற்றிருப்பணி விவரம்-௩௪] அம்மன்சந்நிதித் தோரணவிளக்கு, முன்பு இவராற் செய்யப்பட்டதென்று தெரிகிறது.

* ஆயிரத்தறுநூற்றெண்பதுடனொருபத்து-௧௬௯௦; அது கி. பி. 1768 ஆம்.

அண்ணாலுறு மயிலாபுரிக்கிறைவ ஞந்தம்பி
யண்ணனருள் மகராசவேள்
அத்தர்பத தூக்கிய விருத்தாசலன் றுணைவ
னருணு சலக்குரிசிலே. (கூ௮)

திருமதுரை யம்பதியில் வைகைவட கரைமீது
சீரிதின் முளைத்தெழுந்த
செய்யதிரு வாப்பனூ ரீசர்க்கு மதுகாஞ்
சேர்ந்தகுர வங்கமழ்குழற்
பரைதனக் குங்கர்ப்ப க்ரமர்த்த மண்டபம்
பாங்குடன் கட்டிவைத்துப்
பார்தட்சி ணாமூர்த்தி லிங்கோற்ப வர்துர்க்கை
பயிரவர் சண்டேச்சுரர்
கருதரிய நந்திகேச் சுரர்த்வார பாலகர்
காரானை மாமுகன்வேற்
கடவுடிரு வுருவமுங் கண்டவர்கள் கோயிலுங்
கட்டிவைத் தியல்பாகவே
அருமறைகள் சொன்னபடி கும்பாபி டேகமு
மன்புட னடாத்திவைத்தான்
அலர்மா திருக்குழுபர் மயிலா புரிக்குள்வள
ரருணு சலக்குரிசிலே. (கூகூ)

## காளத்தியப்பன்.

திருமதுரை யூர்கடுவி லிம்மையினி னன்மைதரு
சிவலிங்கர் கோவிலெங்குஞ்
சீரணோத் தாரணஞ் செய்துபர தத்துவஞ்
செஞ்சடைக் கடவுளல்லா
லிருநிலத் தினில்வேறு தெய்வங்க ளெந்நாளு
மில்லையென் பதுபோலவே
யிடபசா லைவீசு பொற்கர்ப மெதிர்காட்டி
யெழில்விழா நடத்தி வைத்தும்
பருமடைப் பள்ளியுங் கற்கிணறு மொருபெரிய
பாங்கான பலிபீடமும்
பண்பாகு மாசிசண் டேச்சுரர் கோவிலும்
பங்கயன் மாலமரருங்

கருதரிய நந்திகே சுரர்குறடு மன்புடன்
கட்டிவைத் திசைமேவினுன்
காவுற்ற சுப்ரமண்ய வேள்பெற்ற புத்ரன்மன்னு
காளத்தி யப்பமன்னனே. (க00)

ஏர்கொண்ட வையைநதி சூழ்மதுரை யூர்தனி
லிம்மையி னன்மைதருவா
ரெய்தா லபத்திலிங் கோற்பவர் வயிரவ
ரெண்டோளி யானதுர்க்கை
தார்கொண்ட தட்சிணு மூர்த்திதங் கோயிலுஞ்
சார்புடன் செய்துவைத்துந்
தாமரைத் தடாகமுண் டாக்கியுங் கோபுரஞ்
சார்ந்ததிரு மதில்கட்டியும்
நீர்கொண்ட பண்ணைபுடைசூழுமளகாபுரியை
நேசமா மீட்டு விட்டும
நித்தியவபி டேகநை வேதனந் திருவிழா
நிலைபெற நடாத்திவைத்துங்
கார்கொண்ட பார்மீதி லாய்ந்தசிவ புண்ணியங்
காணியாத் தேடிவாழுங்
காவுற்ற சுப்ரமண்ய வேள்பெற்ற புத்ரன்மன்னு
காளத்தி யப்பமன்னனே. (க0க)

திருமலைராயன்.

வருமலை மாதிடச் சொக்கர்க்குக் கோச்சடை மண்டபம்பொற்
பருமலை யீருரு நேர்பொற் சதவுபொற் பல்லக்குட
ஞெருமலை காத்தருள் மத்தப ராச னுவந்தளித்த
திருமலை ராச னளித்தான் கருணைச் செழுங்கொண்டலே. (க0உ)

நாரணப்பன்.

பைகொண்ட துத்தி யாவணி கூடற் பதிச்சொக்கரு
மையுண்ட வங்கயற் கண்ணியுங் கண்டு மனமகிழக்
கைகொண்ட பொன்சொண்டு கோச்சடை மண்டபங் கட்டுவித்தான்
வைகுண்ட நாத னருணு ரணப்ப மகீபதியே. (க0ங)

---

க0க. இந்த அளகாபுரி என்னும் ஊர், சிவகங்கை ஜமீனைச்சார்ந்த மதுரைத் தேவஸ்தானக்கிராமமாகும்.

க0ங. கோச்சடை மண்டபம்:-ஆடிவீதியில் அக்கினிமூலையிலுள்ளதென்பர். மதுரைக்குச் சமீபத்துமேல்பாலுள்ள கோச்சடையில் சுவாமி எழுந்தருளிவந்த மண்டபம், பிற்காலத்தில் அப்பெயரால் கோயிலுக்குள்ளேயே கட்டப்பட்டதுபோலும்.

### கோனேரி நாரணன்.

சங்கரர் சொக்கர்க்குச் செம்பொற் பதக்கம்பொற் றாமரைப்பூ
வங்கயற் கண்மட மாதுக்குப் பொற்சிலம் பாமெனவே
தங்குந் திருவா கனவறை யாவுந் தயங்கச்செய்தான்
பொங்கெழிற் பாகையிற் கோனேரி நாரண பூபதியே. (௧0௪)

### ஆறுமுகத்தமுதலி.

திருவளரு மதுரைநகர் மீனாட்சி தேவிதன்
திருமுன்ன ராடிவீதித்
திருமதி ளணித்தாக மேருவெனு மண்டபந்
திரமதாய்க் கட்டிவைத்தும்
மருவளர் மலர்க்கொன்றை யணிசொக்க நாயகரு
மதிநுதற் கயற்கணுமையும்
மகிழ்வுற்று வெள்ளிகிடை மீதெழுந் தருளவே
மனமகிழ்ந் தடிபணிந்தோன்
பருவம தறிந்துதவு வைகையாற் றங்கரைப்
படித்துறையு முடனமைத்தோன்
பாரினெடு நாளிருந் தின்னமிகு சிவபுண்ய
பணிவிடைக ணிறைவேற்றுவோன்
உருவளரு மாரனே நந்தியம் பாக்கமெனு
மூருடைய வன்னியப்ப
வுத்தமன் பெறுமாறு முத்தனென விசைமேவி
யுலகில்வரு சயதுங்கனே. (௧0௫)

### அழகிரிநாயக்கர்.

கோலம் புனையும் வடக்குவாய்ச் செல்விதன் கோவிலுக்கு
ஞாலம் பரவ வருமாசி வீதிக்கு நல்கியதென்
பாலொரு மண்டபஞ் சொக்கர்க்குச் செய்தனன் பாரளந்தான்
போலெங்கண் மும்முடி தந்த வழகிரி பூபதியே. (௧0௬)

---

☞ இன்னுஞ் சில பாடல்கள் மிகச் சிதைந்து காணப்படுகின்றன வாதலால், அவை இங்கே பதிப்பிக்கப்படவில்லை.

---

௧0௫. இவ்வாடிவீதிமண்டபம் அக்கினிமூலையிலுள்ளதென்றும், சக. ௧௬௮௨ [கி. பி. 1760]ல் கட்டப்பட்டதென்றும் விவரங்காணப்படுகிறது. [திருவாலவாயுடையார் கோயிற்றிருப்பணி விவரம்—௩௮.]

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### சங்கப்பதிப்பு.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| *3. | யாப்பணியிலக்கணங்கள் (விசாகப்பெருமாளையர் பஞ்சலக்ஷண வினாவிடையினின்று எடுத்தவை) | | | |
| *4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... | | | |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 2 | 0 | 0 |
| *6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... | | | |
| *7. | தோத்திரத்திரட்டு ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம் பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | அபிதானசிந்தாமணி ... ... ... | 7 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் ... (நச்சினார்க்கினியருரை உரையாசிரியருரையுடன்) | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 3 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி . ... | 1 | 0 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 3 | 0 |
| * | சசைப்புலவராற்றுப்படை உரையுடன் ... | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

### செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கனாநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| *3. | வளையாபதிச்செய்யுட்கள் | | | |
| 4. | புலவராற்றுப்படை (திருக்குருகூர் இரத்தின கவிராயர் இயற்றியது.) ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| *8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) | | | |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 4 | 0 |
| 10.* | அட்டாங்கயோகக்குறள் ... ... | | | |
| 11 * | விவசாயரசாயனசாஸ்திரச்சுருக்கம் ... | | | |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 3 | 0 |
| 14 | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16.* | திருவாரூருலா ... ... ... | | | |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இவர்ணைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... | | | |
| 23. | விக்கிரமசோழனுலா ... ... ... | 0 | 2 | 0 |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை ... | 0 | 1 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... | 0 | 6 | 0 |
| 28. | சந்திராலோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 29.* | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... | | | |
| 30.* | ஞானாமிர்தக்கட்டளை ... ... | | | |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34.* | அகப்பொருள்விளக்கம் ... ... | | | |
| 35. | திருமந்திர நூறுபாட்டுக்குரை ... ... | 0 | 8 | 0 |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 2 | [illegible] | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழிமூலமும் பழைய உரையும் ... (முதல் 100 செய்யுள்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் ... (இரண்டாவது 100 செய்யுள்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... ... | 0 | 4 | 0 |
| 49. | கடைவள்ளலார் காலம் ... ... | 0 | 4 | 0 |

## வேறுபதிப்பு.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சேரன் செங்குட்டுவன் ... ... ... | 1 | 0 | 0 |
| 2. | வஞ்சிமாநகர் ... ... ... | 0 | 8 | 0 |
| 3. | ஜோதிமாலை (தமிழ்நாவல்) ... ... | 0 | 4 | 0 |
| 4. | சிவஞானசுவாமிகள்மீது இரட்டைமணிமாலை ... | 0 | 1 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:—

1. சங்கத்தினின்றும் மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக் கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்ப்" பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4—0—0 தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச் சந்தா ரூ 4—8—0. இதுவரை 20 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 3, 7, 8, 9, 10-ம் தொகுதிகள் கைவசமில்லை பைண்டுசெய்யப்பெறாத கைவசமுள்ள தொகுதிகளுள் 19 ந் தொகுதிமுடிய, தொகுதி 1-க்கு ரூ 2—0—0 வீதமும், 20-வது தொகுதி ரூ 4 வீதமும் விலைக்கு விற்கப்படும். பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகட்கானால் ஏற்பட்ட கிரயத்துக்குமேல் அணா 12 ஆகும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம் ஒன்றில் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்குமேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லெக்ஷ்மிநாராயணையா,

மானேஜர்.